# வில்லி பாரதத் திறவுகோல்

வித்துவான்

ச. கு. கணபதி ஐயரவர்கள், பி. ஓ. எல்.,

எழுதியது.





மதுரை, பாரதி அச்சுக்கூடத்தாரால்
பதிப்பிக்கப்பெற்றது.

பதிப்புரிமை] 1940

# மு ... வுரை

"போதுமே; பாரதக் கதை வளர்த்த வேண் டாமே" என்று அலுத்துப்போய் நண்பர்கள் சொல் லும்போது அவர்களே அறியாமலே பாரதத்துக்கு ஒரு குறை கூறிவிடுகிறார்கள். 'மகாபாரதம்' என்று ... மகா சப்தம் போட்டு அந்த இதிகாசத்தைக் ... கிறார்கள். தொடர்ச்சியாக மகாபாரதத்தைப் ... முடிப்பது மிகவும் சிரமமான காரியம்.

...வளவு சிரமமும் பாரதத்தின் பெருமையாலே ...து; "எனக்குப் பாரதமும் வேண்டும்; சலிப்பும் ...ரக்கூடாது" என்று ஒருவர் சொன்னால், சிறிய ...ளவிலே பாரதக் கதையைச் சுவை தரும்படி ...டுத்துக் காட்டும் பதிப்பு ஒன்று ஸித்தம் செய்து தர ...ண்டும். அதைத்தான் ஐந்நூறு வருஷங்களுக்கு ... வில்லிபுத்தூரார் செய்தார். மகாபாரதத்தைத் ...மிழ்ப் பாரத மாக்கித் தமிழ் நாடு முழுவதும் ...ப்பினார்.

இராமாயண பாரதம் இரண்டும் இந்திய மக்கள் ...ள்ளத்தைக் கவர்வன. தமிழ் நாட்டிலும் அவ் விரண்டு இதிகாசங்களும் கிராமந்தோறும் வழங்கிய

காலமும் உண்டு. வடமொழி ராமாயணமும் தமிழ் இராமாயணமும் போட்டி போட்டுக் கொண்டு தமிழ் நாட்டார் மனத்தைக் கவர்ந்தன. பாரதமோ தமிழுருவத்திலேதான் தமிழர் உள்ளத்தைப் பிணித்தது. தமிழிலே வேறு சில பாரதங்கள் இருந்தாலும் அவற்றை அமிழ்த்திவிட்டு மேலே எழுந்து நிற்பது வில்லிபாரதமே யாகும்.

பாரதக் கதையைச் சுருக்கமாகச் சுவைபட இனிய நடையில் வில்லி இயற்றினார். அதனால் அது வடமொழி தென்மொழிப் பாரதங்களை விஞ்சி நிற்கின்றது. தமிழ்நாட்டுக் கிராமங்களில் இன்று திரௌபதியம்மன் திருவிழாக்களில் வில்லியாரின் கவிதையும் கதையும் தாண்டவ மாடுவதை நாம் காண்கிறோம். பாரதக் கதையின் சாரத்தைத் தங்கு தடை யில்லாத மலை யருவிபோலச் செல்லும் கவிதை யோட்டத்திலே வில்லிபுத்தூரர் நமக்குத் தந்திருக்கிறார். மகாபாரதத்துக்கு வில்லிபாரதம் ஒரு திறவுகோல்.

வில்லியின் கவிதையிலே ஊறியெழுந்த நண்பர் கணபதி ஐயர் அவ் வில்லியின் போக்கைப் பின்பற்றி வில்லிபாரதத்துக்கு இப்போது ஒரு திறவுகோல் தந்திருக்கின்றனர். வில்லிபாரதம் மகா பாரதத்தி

லுள்ள விஷயம் அனைத்தையும் சொல்வதன்று. ஆனாலும் பாரதமாகிய பேரரண்யத்தின் முகப்பிலே உள்ள சோலைபோல விளங்குகிறது. நம் நண்பரும் இவ்வாராய்ச்சியில் தாம் அறிந்த நயங்கள் அவ் வளவையும் எடுத்துக் கூறவில்லை; சிலசிலவற்றை வெளியிட்டு வழிகாட்டியிருக்கிறார். இது திறவுகோல் தானே! இதைக் கொண்டு பெட்டியைத் திறந்து உள்ளே கிடக்கும் அருந்தனத்தைப் பெற்றுப் பயன் பெறுவார் பெறலாம்.

சரித்திரச் சண்டையை இப்புத்தகத்தின் ஆசிரியர் பெரிதாக்கவில்லை. அந்தச் சண்டைகளைக் கவனித்தால் வில்லியார் கூறும் பாரதச் சண்டையைக் கவனிக்கப் போது இராது. வில்லிபுத்தூரர் ஆழ்வாரோ, நாயனாரோ யாராயினும் அவர் கண்ணபிரானிடத்தில் மட்டற்ற ஆசையுடையவர்; அதனால் பாரதம் பாடத் தொடங்கினார் (பக், 21, 28). ஆயினும் 'அரியும் சிவனும் ஒன்று' என்ற உண்மையை ஹ்ருதய பூர்வ மாக உணர்ந்தவர். சிவபிரானைப் பாடுகையில் அவர் பரம சைவராகவே தோற்றுகிறார் (பக். 24-7). இந்த விஷயத்தை நூலிலுள்ள பகுதிகளால் இப்புத்தக ஆசிரியர் விளக்கிச் செல்வதை உள்ளே காணலாம்.

வில்லிபுத்தூரார் ‘ஓதாது உணர்ந்த’ கவி யல்லர். நன்ருகப் படித்தவர். புத்தகத்தை மட்டு மன்று; உலகத்தையும் அறிந்து படித்தவர். அவர் வாக்கில் பழைய நூல்களின் மணம் வீசுகிறது. ஆனுலும் அவர் அவற்றிற்கு அடிமையாகி விடவில்லை. தம்முடைய தனிப்பண்பை வெளிப்படுத்துகிருர். பல பகுதிகள் வடமொழி நூலாகிய பால பாரதத்தின் மொழி பெயர்ப்பாக இருந்தாலும், மொழி பெயர்ப்பென்று நண்பர் கூறத் தெரிகிறதே ஒழிய, (பக். 59) பாட்டிலே தெரியவில்லை; அவ்வளவு இயற்கையாக ஓடுகிறது வில்லியின் வாக்கு.

இருபது தலைப்புக்களின் கீழ் நண்பர் வில்லி பாரதத்தை அலசிக் காட்டியிருக்கிருர்; அப்படி அலசும்பொழுது செடியின் அழகு குலையவில்லை; அதில் நம் கண்ணுக்குப் படாமல் மறைந்து கிடக்கும் மலர் களும் ‘இலைமறை காய்களும்’ புலனுகின்றன. அதோடு நின்று விடாமல் மேலும் நாம் ஆராய்ந்து இன்புற வழியும் காட்டுகிருர். இந்த உதவியைத் தமிழர் பாராட்ட வேண்டுவது அவசியமல்லவா?

**கி. வா. ஜகந்நாதன்.**

# முகவுரை

வில்லி பாரதத்தை நான் பல ஆண்டுகள் பல முறை படித்து இன்புற்றுள்ளேன். அக்காரணத்தால் என்னை அறியாது அந்நூலினிடம் எனக்கு மிக்க பற்றுதல் ஏற்பட்டிருக்கிறது. தமிழறிவைப் பெற விரும்புவோருக்கு அந்நூற்பயிற்சி மிகவும் இன்றியமையாததாகுமென்பது, என் கருத்து மட்டுமன்று; பல பெரியார்களின் கருத்துமாகும். அத்தகைய பெருமை வாய்ந்த வில்லிபாரதத்தை எவரும் எளிதிற் படித்து இன்புற வேண்டி அதற்குக் கருவி நூலாக **'வில்லிபாரதத் திறவுகோல்'** என்ற இதனை எழுதலானேன்.

இதனுள் நான் சேர்க்க நினைத்திருந்த செய்திகள் இன்னும் சில உண்டு. என் நண்பர்கள் வில்லி பாரதத்தைப் படித்தோர்க்கே அவை பயன்படுமென்றெண்ணி, வேறொரு புத்தகமாக அவற்றை வெளியிடுதல் நலமென்று கூறினர்கள். அன்னர்தம் கருத்துக்கிணங்கி இவ்வளவோடு இந்நூலை முடித்துள்ளேன்.

வில்லி பாரதத்துள் மூன்று பதிப்புக்கள் இப்பொழுது வெளிவந்துலவுகின்றன. இப்புத்தகத்துள் எடுத்தாளப்பட்ட செய்யுளெண் முதலியன, யாழ்ப்பாணம் **ஸ்ரீ நா. கதிரைவேற் பிள்ளை அவர்கள்** பரிசோ

தித்த பிரதிக்கிணங்கப் பதிப்பிக்கப்பட்ட பதிப்பில் உள்ளவற்றைக் குறிப்பனவாகும்.

அரும்பதக் குறிப்பு, மேற்கோள் விளக்கம், ஒப்புமைப் பகுதிகள், இலக்கண வமைதிகள் முதலியவை அந்த அந்தப் பக்கத்தில் அமைய, வில்லி பாரதத்தை மாணவர் படிப்பதற்கு ஏற்றவாறு அச்சிற் பதிப்பிக்க வேண்டுமென்பது என் நீண்ட நாள் விருப்பமாகும். அதற்கு இடம்பொருளேவல்கள் ஒத்துக்கொள்ளாமற் போன நிலையில் இச்சிறு புத்தகத்தையாவது வெளியிடற்கு அருள் புரிந்தருளிய ஆண்டவனை எம்மொழிகளால் வழுத்தவல்லேன்!

இதனை இவ்வுருவிற் கொண்டுவந்து யாவருக்கும் படிக்கும் சந்தர்ப்பத்தைக் கொடுத்துள்ள **மதுரை, பாரதி அச்சுக்கூடத்தார்க்கும்**, இதற்கு ஒரு முன்னுரை அளித்துதவிய என் நண்பர் **வித்துவான் கி. வா. ஜகந்நாதையரவர்களுக்கும்** நான் பெரிதும் கடப்பாடுடையேன். யான் வேண்டிக்கொண்டவாறு இதனைத் தமக்கு உரிமையாக ஏற்றுக்கொண்டு என்னை அநுக்கிரகித்தருளிய என் ஆசிரியப் பெருந்தகையார் **மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்களுக்கு** எழுமையும் தொண்டு பூண்டு ஒழுகலன்றி எளியேன் வேறு கைம்மாறறியேன். இங்ஙனம்,

**ச. கு. க.**

# உரிமையுரை

தண்டமிழின் வரம்புணர்ந்த
　　தனித்தலைவன் சங்கச்
சான்றவரெல் லாமொருங்கே
　　தோன்றியென வந்தோன்
பண்டையநூல் பலபலவும்
　　கண்டெடுத்தா ராய்ந்து
பண்படுத்திப் பயில்வார்க்குக்
　　கண்கொடுத்த பெரியோன்
கண்டெனுநன் மொழியனுயர்
　　தொண்டரொடு மெனக்கும்
கவின்றமிழி னயந்தெரிய
　　நவின்றவருட் குரவன்
உண்டுதமி ழெனினிவனு
　　லெனவுரைக்கும் வள்ளல்
ஒளிர்சாமி நாதமறை
　　யோர்க்குரிமை யிதே.

ச. கு. க.

# பொருளடக்கம்

# வில்லி பாரதத் திறவுகோல்

## 1. தோற்றுவாய்

உலகத்தில் இன்பந்தரும் பொருள்களிலே கல்வி சிறந்ததொன்றும். மற்றவற்ருல் உண்டாகும் இன்பங்கள் எல்லாம் அவற்றை அநுபவித்த முடிவில் தெவிட்டி வெறுப்பைத் தருவனவாயிருக்கக் கல்வியின்பம் ஒன்றே நூல்களை ஆயுந்தோறும் சுவையைப் பெருக்குகின்றது. இத்தகைய கல்வி யின்பத்தைக் கற்ருேரே அநுபவிக்கிருர்கள் என்பது சரியன்று. கற்ருேர் ஒரு நூலின் அமைப்பு, கவிகளில் காணப்படும் உவமை, உருவகம், தொனி, சிலேடை, பாவம், ரஸம் முதலிய பண்புகளிலே தம் கருத்தைச் செலுத்தி மகிழ்ச்சி யடைகிருர்கள் என்ருல், கல்லாதோர் அக்கற்ருேர் கூறக் கேட்டுக் கேள்வி வாயிலாக அந்த இன்பத்தைப் பெறுகிருர்கள். காவியம் போன்ற பெரிய நூல்களின் கதை யமைப்புக் கல்லாதோரையும் கவர்ந்து விடுகின்றது.

மனிதர் நூல்களைப் படித்துத் தம் உள்ளத்தில் இன்பத்தை அடையும் பொருட்டே அறிவு வாய்ந்த புலவர்கள் காவியங்களை அருளிச் செய்துள்ளார்கள்

என்று சொல்வது மிகையாகாது. ஒவ்வொரு மொழியினரும் தத்தம் மொழியிற் பல காவியங்களை முதனூல்களாகப் பெற்றிருப்பதோடு வேறு மொழிகளில் உள்ள காவியங்களையும் தம் பாஷையில் பெயர்த்தெழுதிப் படித்து மகிழ்ந்து வருவது யாவரும் அறிந்த செய்தியே யாகும். பிறமொழியினரையும் கவரத்தக்க கதை யமைப்பையுடைய காவியங்கள் உலகத்தில் மிகச் சிலவே ஆகும். அவற்றுள்ளும் சிறந்தவையாகப் பாராட்டப் பெறுபவை நமது தேசத்து இதிகாசங்களாகிய இராமாயணமும், மகா பாரதமுமே யாகும். இவ்விரு நூல்களும் முதன் முதலில் வடமொழியில் எழுதப்பெற்றுப் பிறகு மற்ற மொழிகளில் பெயர்த்துக்கொள்ளப் பெற்றன.

இராமாயணமும், பாரதமும் பலவேறு காலங்களில் பல தமிழ்ப் புலவர்களால் தமிழில் பெயர்த்தெழுதப்பட்டன. புலவர்கள் ஒரு நூலை மற்றொரு மொழியில் தரும்போது அநேகமாகக் கதையளவில் முதனூலைத் தழுவி, வருணனைகள், புதிய கொள்கைகள் முதலியவற்றைத் தங்கள் காலத்து நிலைமைக்கு ஏற்ப அமைத்து மாற்றி அந்நூலுக்குப் புதிய சக்தியை உண்டுபண்ணுவது வழக்கம். இங்ஙனம் தமிழில் அமைந்தவை கம்பர் எழுதிய இராமாயணமும், வில்லிபுத்தூரார் எழுதிய பாரதமும் ஆகும். இவைகளுக்கு

முன்னும் பின்னும் பல இராமாயணங்களும் பாரதங்களும் தோன்றின; எனினும் அவை சிறப்பின்றி அழிந்துபட்டன. எஞ்சிய இரண்டொரு நூல்கள் கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன.

கம்பராமாயணம், வில்லிபாரதம் இவற்றுள் முன்னதன் பெருமையைத் தமிழ் உலகம் நன்முக அறிந்திருக்கிறது; தமிழரல்லாதோரிற் பலரும் அறிந்துள்ளார்கள். ஆனல் வில்லி பாரதத்தின் பெருமை அவ்வளவாகப் பரவியிருக்கவில்லை. அந்நூலின் நயங்களை விளக்கிக் காட்டத் தக்க ஆராய்ச்சிக் கட்டுரைகள் போதிய அளவில் வெளிவந்து உலவாமையே இதற்குக் காரணம் என்று எண்ணுகிறேன். வில்லி பாரதத்தின் பெருமையைப் பற்றி எழுத எனக்கு எவ்வளவோ ஆசை உண்டு. அவ்வாசை காரணமாக இச் சிறு நூலை எழுதத் தொடங்கியுள்ளேன்.

## 2. தமிழ்ப் பாரத நூல்கள்

வில்லி பாரதத்தைப் பற்றியும் அதன் ஆசிரியரைப் பற்றியும் எழுதப் புகுவதற்கு முன், தமிழில் தோன்றிய பாரதங்களைப் பற்றிய சில செய்திகளை இங்கே குறிக்க விரும்புகிறேன்.

கடைச்சங்க காலத்தில் பெருந்தேவனர் என்பவரால் ஒரு பாரத நூல் வெண்பாவும் ஆசிரியமும்

விரவிவர எழுதப் பெற்றது. அஃது இப்பொழுது அழிந்து போய்விட்டது. அதிலிருந்து சில செய்யுட்களைப் பழைய உரையாசிரியர்கள் தொல்காப்பியம், யாப்பருங்கலம் முதலிய நூல்களின் உரைகளில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்கள். புறத் திரட்டு என்ற நூலிற் பல பழம்பாரதப் பாட்டுக்கள் காணப் படுகின்றன. அச் செய்யுட்களையே நாம் இப் பொழுது காண்கின்றோம்.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் தெள்ளாற்றிற் போர் வென்ற **மூன்றாம் நந்திவர்ம பல்லவன்** காலத்தில் பாட்டும் வசனமும் கலந்து ஒருவர் ஒரு பாரதத்தை இயற்றினார். இதிலுள்ள செய்யுட்கள் பெரும் பாலும் வெண்பாக்களும், சில சில ஆசிரியப்பாக்களும், இரண்டொரு விருத்தங்களுமாகும். அந்நூல் இக் காலத்தில் '**பெருந்தேவனார் பாரதம்**' என்றும் '**பாரத வெண்பா**' என்றும் வழங்குகிறது. பாரதம் பாடிய சங்க காலத்துப் பெருந்தேவனார்போல் தாமும் பாரதம் செய்த காரணத்தால் இந் நூலாசிரியரை மக்கள் பெருந்தேவனார் என்றே வழங்கலாயினர் போலும்! இந்நூலில் உத்தியோக பருவம் முதல் துரோண பருவம் ஈறுக ஏறக்குறைய 800 செய் யுட்களே இக்காலத்தில் வழங்கிவருகின்றன. மற்றப் பகுதிகள் சென்றவகை புலனாகவில்லை.

அதன் பின்னர் இற்றைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு வில்லிபுத்தூரர் தமது பாரதத்தை விருத்தங்களாக இயற்றினர். இதுதான் இப்பொழுது விசேஷமாகப் பாராட்டப்பெறும் பாரத நூல். இந்நூல் பாரதக் கதையைச் சுருக்கிக் கூறுவது; 'பாண்டவர்கள் போர்வென்று முடி சூடிக்கொண்டு இனிது வாழ்ந்து வந்தார்கள்' என்ற வரையிலுள்ள கதையை மட்டும் (பதினெட்டுப் பருவங்களாக வடமொழியிலுள்ள நூலின் முன் பத்துப் பருவங்களை மட்டும்) குறிப்பது. இது **வில்லி பாரதம்** என்று வழங்குகிறது.

பாரதச் சுருக்கமாகிய இந்நூலை விரிவாக அமைக்கக்கருதி 180 வருடங்களுக்கு முன் நல்லாப் பிள்ளை என்பவர் வில்லிபுத்தூராரின் செய்யுட்களைச் சேர்த்துக் கொண்டு அவர் சுருக்கிக் கூறிய கதைகளை விரித்தும், அவராற் கூறப்படாதவற்றைச் சேர்த்தும் பெரிய நூலாக ஒரு பாரதம் ஆக்கியுள்ளார். இது **நல்லாப் பிள்ளை பாரதம்** என்று வழங்குகிறது. இந்நூல் அச்சேறியிருக்கிறபடியால் இப்பொழுது கிடைக்கக் கூடியதாக இருக்கிறது.

வில்லிபுத்தூரர் பாடியுள்ள பத்துப் பருவங்கள் போக எஞ்சியுள்ள எட்டுப் பருவங்களின் கதையை

இற்றைக்கு 150 வருடங்களுக்கு முன் **அரங்கநாத கவிராயர்** என்பவர் விருத்தங்களாகப் பாடியுள்ளார். இவருக்கு வில்லிபுத்தூரார்மீதும் அவரியற்றிய பாரதத்தின்மீதும் அதிக மதிப்புண்டு. நல்லாப்பிள்ளையும் அரங்கநாத கவிராயரும் வில்லிபாரதத்தை ஒட்டியே தம் நூல்களைச் செய்துள்ளமை வில்லி பாரதத்தின் பெருமையைப் புலப்படுத்துவதாகும்.

இவைகளைத் தவிரச் சென்னைக் கையெழுத்துப் புத்தகசாலையில் '**மாவிந்தம்**' என்று ஒரு பாரத நூல் இருக்கிறது. அதுவும் விருத்தங்களால் ஆனதே. அதன் நடைப் போக்கு நன்றாயில்லை.

ஸ்ரீ சிவஞான முனிவரும் கச்சியப்பரும் அருளிச் செய்த காஞ்சிப் புராணத்தைத் தவிர, அவர்கள் காலத்துக்கு முன்னரே தமிழிற் செய்யப்பட்ட ஒரு காஞ்சிப்புராணம் உண்டு. அதனை இயற்றியவர் ஒரு பாரதத்தையும் எழுதி யிருக்கிறார் என்று அப்பழைய காஞ்சிப் புராணச் சிறப்புப் பாயிரச் செய்யுளால் தெரிய வருகிறது. அந்தப் பாரதம் இப்பொழுது கிடைக்கவில்லை.

இவைகளைத் தவிரப் பாரதக்கதையின் சில சில பாகங்கள் அவ்வப்போது பலரால் செய்யுள் வடிவில் வெளியிடப் பட்டுள்ளன. இத்தனை நூல்களுள்ளும்

தமிழ் மக்கள் வில்லி பாரதத்தையே பெருமை வாய்ந்த தாக எண்ணிப் பாராட்டி வருகிறார்கள். இந்தச் சீரிய நூலைப் புதிய முறையில் ஆராய விரும்பி அந்த ஆராய்ச்சியின் தொடக்கத்தில் அதன் ஆசிரியராகிய வில்லி புத்தூரரின் சரித்திரத்தை ஒருவாறு ஆராயத் தொடங்குகிறேன்.

## 3. சரித்திர ஆராய்ச்சிக்குரிய சாதனங்கள்

புலவர் சரிதங்களை ஆராய்வோருக்கு இக்காலத்தில் கிடைத்துள்ள சாதனங்கள் மிகக் குறைவே. நம்பத் தக்க ஆதாரங்கள் இல்லாத காலத்தில் பல பல புலவர்களின் சரிதங்கள் ஒரு சிலரால் எழுதி வெளியிடப்பட்டிருக்கின்றன. சரித்திர சம்பந்தமான கண் கொண்டு பார்ப்பவருக்கு அச் சரித்திரச் செய்திகள் தவறானவை என்பது தெள்ளிதின் விளங்கும். வெவ்வேறு காலங்களில் இருந்த புலவர்களை ஒருகாலத்தவர்களாக்கிப் பொறாமைப் பேய் அவர்கள்பால் குடி கொண்டிருந்ததாகக் கற்பனை செய்து அமாநுஷ்யமான செயல்களை அவர்கள் செய்திருக்கிறார்களென்று புனைந்து ஒரு சிலர் எழுதியுள்ள நூல்களிலே காணப்படும் “புலவர் சரிதைகள்” சரித்திரவாராய்ச்சிக்கு எவ்வாறு துணை புரியும்? இந்நிலையில் கிடைக்கக் கூடிய சாதனங்களை வைத்துக்கொண்டு கூடியவரை

யில் நடுநிலைமை வகித்துப் புலவர்களின் சரிதங்களை எழுதுவோர் தற்காலத் தமிழ் உலகத்துக்குச் சிறந்த தொண்டு செய்பவர்கள் ஆவார்கள்.

அங்ஙனம் எழுதப் புகுவோர்க்கு இப்பொழுது கிடைக்கத்தக்க சாதனங்கள் என்ன என்ன வென்று ஆராய்வோம். முதல் ஆதாரம் அப்புலவர்களே எழுதிய நூல்களும், அவற்றின் சிறப்புப்பாயிரங்களும் ஆகும். அடுத்தபடியாக அப்புலவர்களைப்பற்றிப் பிற புலவர்கள் வேறிடங்களிற் கூறியிருக்கும் செய்திகளைக் கொள்ளலாம். மூன்ருவதாகக் கர்ண பரம்பரைச் செய்திகள் துணைபுரிகின்றன. இந்த மூன்ரும் ஆதாரம் அவ்வளவாக உண்மையான தென்று கொள்வதற்கில்லை. ஏனென்ருல் தம் சாதியாரான புலவரைப் பற்றி ஒருசாதியார் அளவு கடந்து புகழ்ந்து கூறியிருப்பதும் ஒரு புலவரைப் பற்றி அவர்தம் சாதியின்மீது வெறுப்புள்ள வேறு சாதியார் தூஷித்திருப்பதும் நம் நாட்டில் சர்வசாதாரணமாகக் காணப்படும் செய்தியாகும். புலவர் சரித்திர ஆராய்ச்சிக்குச் சாசனங்கள் துணைபுரியுமேல் அவை சிறந்த ஆதாரமாகும். அத்தகைய ஆதாரம் போதியதாகத் தமிழில் இல்லை.

வில்லிபுத்தூராரின் சரித்திரத்தை ஆராய்வதற்கு இப்பொழுது கிடைத்துள்ள ஆதாரங்களாவன: அவர்

எழுதிய பாரதத்திற் காணப்படும் சிறப்புப்பாயிரம் ஒருவாறு அவர் சரித்திரத்தைச் சுருக்கிக் கூறுகிறது. அது தக்க ஆதாரமே யாகும். வில்லி பாரதத்துள்ளும் அகச் சான்றுகளாகச் சில சில விஷயங்கள் நமக்குப் புலனுகின்றன. தனிப்பாடல், தமிழ்விடுதூது போன்ற சில நூல்களில் இவரைப்பற்றிய சில செய்திகள் சொல்லப்படுகின்றன. புலவர் புராணம் இவர் சரித்திரத்தைக் கூறுமிடத்து வில்லிபாரதச் சிறப்புப் பாயிரத்துக் காணப்படும் சரித்திரத்துக்கு மாறு பாடான சில செய்திகளைக் கிளத்திச் செல்கின்றது. ஆகையால் அப்புராணத்திற் கண்ட வரலாறு கொள்ளத்தக்க ஆதாரமாகாது. ஆயினும் அப்புராண முடையார் வில்லிபாரதத்தின் பெருமையைச் சில கவி களிலே விளக்கிக் காட்டியுள்ளார். வில்லிபாரதத்தி னிடத்தில் அவருக்கிருந்த பயிற்சியையும் நல்ல உயர்ந்த மதிப்பையும் அச்செய்யுட்கள் புலப்படுத்துகின்றன. மேற்கூறிய இந்த ஆதாரங்களைக்கொண்டே வில்லி யாரின் சரித்திரம் இங்கே எழுதப்படுகின்றது. ஆசிரி யர் வரலாற்றை அறிந்திருப்பது நூலின் பெருமையை அறிந்து கொள்வதற்கேயாம். ஆகையால் அவரு டைய சரித்திரம் நமக்கு அவ்வளவு முக்கியமன்று; நூலாராய்ச்சியே மிகவும் முக்கியமானது.

## 4. ஆசிரியரின் பெயர்

சிறப்புப்பாயிரம் இவரை வில்லிபுத்தூரன் என்கின்றது. தற்காலத்தில் சிலர் இவரை வில்லிபுத்தூராழ்வார் என்று வழங்குகிறார்கள். அரங்கநாத கவி இவரைத் தம் பாரத நூலின் முன்னுரைச் செய்யுட்களிலொன்றில் 'வில்லிபுத்தூராழ்வார்' என்று சுட்டுகிறார். 'சமயக்கணக்கர் மதிவழிகூறாது உலகியல்கூறிய' வள்ளுவரை நாயனார் என்று கூறி அவருக்குச் சிவசின்னங்களை அளித்த தமிழ்நாடு, காளி கோவிற் பூசாரி மரபிற் பிறந்த சைவராகிய கம்பரை, கம்ப நாட்டாழ்வாரென்றழைக்கும் தமிழ்நாடு, சிறந்த வைணவராகிய இவரை ஆழ்வார் என்பதில் பிழை இருப்பதாகத் தோன்றவில்லை. தமிழ்விடுதூதும் தனிப் பாடற்றிரட்டும் இவர்தம் பெயரை வில்லி என்று குறிக்கின்றன. வில்லி பாரதம் என்ற வழக்கும் இருந்து வருகிறது. வில்லி என்பது வில்லிபுத்தூரர் என்பதன் நாமைகதேசமென்று ஒரு சிலர் கருதுகிறார்கள்.

வில்லிபுத்தூர் என்பது பாண்டிநாட்டிலுள்ள ஒரு வைஷ்ணவ ஸ்தலம். அது பெரியாழ்வார் அவதார ஸ்தலம். பெரியாழ்வார் அங்கே அவதரித்தமை பற்றி அவர் வில்லிபுத்தூர்ப் பட்டன், வில்லிபுத்தூர்க் கோன் என்று வழங்கப் பெறுவர். அவ் வாழ்வாரிடத்

துத் தமக்கிருந்த பக்தியின் காரணமாக வில்லியின் தந்தையார் அப்பெயரை இவருக்கு இட்டு வழங்கினர் போலும். வில்லிபுத்தூர் இவர் பிறப்பிடமன்று.

## 5. பிறப்பிடம்

இவர் பிறந்த ஊர் திருமுனைப்பாடி நாட்டைச் சார்ந்த சனியூர் என்று பாயிரம் கூறுகின்றது. அப் பாயிரம் திருமுனைப்பாடி நாட்டைப் பல கவிகளால் சிறப்பித்துக்கூறுகின்றது. நந்தி மலை, பெண்ணையாறு, சில ஸ்தலங்கள், சில அடியார்கள், புலவர்கள் பிரசித் தியுற்றிருப்பதே இந்நாட்டின் பெருமையைப் புலப் படுத்தற்குப் போதிய சான்றாகுமென்று குறிப்பிக் கின்றது. இந்நாடு வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு பெயர்களால் வழங்கப்பட்டு வந்துள்ளது. திருமுனைப் பாடி நாடு, நடுநாடு, மாகதக்கொங்கு, வடகொங்கு முதலியவை அப்பெயர்களாகும்.

அரசர்கள் முன்னிலையில் அவர்களின் கீர்த்திகளை விவரித்துப் பாடுவோர் **திருமுன்னைப்பாடி** என்று வழங்கப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. திருமுன் என் பது சந்நிதானம் என்பதைத் தெரிவிக்கும். ஒரு திரு முனைப்பாடியாருக்கு ஏவரோ பரிசிலாகக் கொடுத்த நாடு திருமுனைப்பாடி நாடு என்று பெயர் பெற்றது போலும். 'அறநெறிச்சாரம்' என்ற நீதி நூலை இயற்

றிய ஆசிரியர் பெயர் **திருமுனைப்பாடியார்** என்பது நாம் அறிந்ததொன்றாகும். சேக்கிழார் தம் நூலில் இப் பெயரை எடுத் தாளுகிறார். வில்லிபாரதத்தின் பாயிரம் இந்நாட்டைப் பழைய நாடு என்கின்றது. (செய்யுள் 6, 14.).

இந் நாட்டில், சனியூர் என்பது இக் காலத்தில் எந்தப் பெயரோடு வழங்குகிறதென்று தெரியவில்லை.

## 6. சாதி மதம்

இவர் நான்கு வருணங்களிலே அந்தணர் வருணத்தைச் சார்ந்தவரென்றும், பைந்துழாய் முடிப் பரமனைப் பல கவிகளிற் பாராட்டியவரென்றும் இவர் தந்தையின் பெயர் **வீரராகவன்** என்றும் பாயிரம் கூறுகின்றது. இவர் அந்தணரென்பது யாவருக்கும் ஒப்ப முடிந்த அபிப்பிராயமாகும். வைணவர் மரபில் உதித்தவர். திருமாலிடத்தில் மிக்க ஈடுபாடுடையவர். இடையிடையே கண்ணனுடைய சரித்திரம் வழங்கும் காரணம்பற்றித் தாம் பாரதத்தைத் தமிழிற் பாடத் தொடங்குவதாகத் தற்சிறப்புப் பாயிரத்தில் இவர் கூறுகிறார்.

“ முன்னு மாமறை முனிவரும் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன் ;

மன்னு மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும்
என்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன் ''

என்பது இவர் வாக்காகும்.

இதற்கேற்ப நூலகத்து, கண்ணன் பெருமை பலவிடங்களில் நன்கு விளக்கப்படுகின்றது. திருமாலை எம்பிரான், எம்பெருமானென்று பலவிடங்களில் எடுத்தாளுகிறார். பாரதத்தில் முதற்பாட்டை 'எங்கள், மாதவன்' என்று தொடங்கி ஈற்றுச் செய்யுளில், 'வினையகற்றும் பசுந்துளவோன்' என்று இவர் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. இவற்றைத் தவிரச் சருக்கங்கள்தோறும் முதலில் இவர் திருமாலைத் துதித்திருக்கிறார். சில சருக்கங்களின் முன் காப்புச் செய்யுட்கள் காணப் படவில்லை யாயினும் மொத்தத்தில் 36 செய்யுட்கள் இதுவரையில் அச்சான பாரதங்களில் வெளி வந்துள்ளன. அவற்றுள் கண்ணனுடைய பாலலீலைகள், பெருமைகள் முதலியவற்றைக் கூறுவன 15 செய்யுட்கள். திருமாலுக்குப் பரத்துவம் கற்பிப்பவை 7 கவிகள். திருமாலின் ஒன்பது அவதாரங்கள், தசாவதாரங்கள், வாமனவதாரம், இராமாவதாரம் இவற்றைக் கூறுவன 5 பாடல்கள். அஷ்டாக்ஷர மகிமையைக் கூறுவன 2 விருத்தங்கள். திருமாலின் தாள்களின் பெருமை, ஆதிசேடன் பாக்கியவானென்பது முதலிய பிறவற்றைக் கூறுவனவும் உண்டு.

'எங்கள் கோவே', 'எனை ஆண்டதாள்', 'எனை ஆண்டருள் ஆழியான்', 'எனை ஆண்டோன்', 'நாதனுர் நமக்கே'

என இக்காப்புச் செய்யுட்களில் திருமால் தம்மை ஆட் கொண்டதாகக் கூறுகிறுர்.

'இரவும் நண்பகலும் பணிந்து பாடுது மவன் புகழே',
'இறக்கும் பொழுதும் மறவேன்',
'தாள் தலைமிசை யல்கிலா',
'நயனம் விட் டகலாவே',
'நின் புகழலா துரையேன்',
'மலரடி மறவேன்',
'மனத்தை விட் டகலாவே'

எனத் தாம் எப்பொழுதும் திருமாலை மறவாமலிருத்தலைப் புலப்படுத்துகிறுர்.

'தொழுவார் கருவிலே திருவுடையார்',
'எழு பிறவித் துவக்கற்றுரே'
'நாமங்களுள் ஒன்றை ஒருகாற் கூறினுர் நரகிற் புகார்',
'பிறவாழிக் கரை கண்டாரே',
'போற்றுவார் எழுபிறப்பு மாற்றுவாரே',
'மறவாதார் பிறவாதார்',

எனத் திருமாலைத் துதிப்போர்க்கு வரும் பயனைக் குறிப்பிடுகிறுர்.

ஆழ்வார்களில் **திருமங்கையாழ்வாரை**, 'கலியனெங்கள் மங்கையாதி கண்டு கொண்ட நாமமே' என்

றும், நம்மாழ்வாரை, 'குறுகையாதி நெஞ்சிலேவைத்த முத்திநாதன்' என்றும் கூறுகிறார். 'ஈராறுநாமம் மண்கொ டிடுவார்கள் காணுமிமையோர்,' 'புரா தனன்றனையே யேத்தும் புனிதர்தாள்போற்றி செய் வாம்' என்பன அடியார் பெருமையைப் புலப்படுத் துவனவாம்.

பாரதத்தில் ஏதேனும் ஒரு சருக்கத்தில் கண்ண னது லீலாவைபவம் கூறப்பட்டிருக்குமானால் அதன் அடுத்த சருக்கத்தின் தொடக்கத்தில் அந்த லீலாவைப வம் சுருக்கமாகத் தொகுத்துக் கடவுள் வாழ்த்தாகக் கூறப்பெற்றிருக்கும். ஒரு லீலாவைபவத்தை எழுது வதில் அவர் மனம் எவ்வாறு ஈடுபட்டிருந்தது என் பதை அடுத்த சருக்கத்துக் காப்புச் செய்யுள் நமக்குத் தெரிவித்துவிடுகின்றது. இவ்வகையில் அமைந்தவை இராசசூயச்சருக்கம், கிருட்டிணன் றூதுச்சருக்கம், படையெழுச்சிச் சருக்கம், இரண்டாம் போர்ச் சருக் கம், பதினான்காம் போர்ச் சருக்கம் முதலியவற்றின் காப்புச் செய்யுட்களாகும்.

ஆழ்வார்களின் பாசுரங்களில் இவருக்கு ஈடு பாடுண்டு. **தொண்டரடிப்பொடியாழ்வார்,**

'புறஞ்சுவர் கோலஞ் செய்து புட்கவ்வக் கிடக்கின்றீரே'

என்று திருமாலையில் அருளிச் செய்ததை,

‘அறஞ்செறி தானம் வண்மை யளவிலா தளித்து நாளும்
புறஞ்சுவர் கோலஞ் செய்வான்’ (சூது. 5)

என்று தம் நூலில் அமைத்துள்ளார். இவர் வைண வர்தாம் என்பதற்கு இவற்றை யெல்லாங் காட்டிலும் வேறு சான்று வேண்டுமோ!

வைணவராயினும் வில்லிபுத்தூரர் சிவபெரு மானைப் பலவிடங்களில் விசேஷமாகப் புகழ்ந்து கூறி யிருக்கிறார்.

‘இருசெவி படைவீ டாக எம்பிரான் அளிக்கப் பெற்ற பெரு
முனி, (இங். 42)

‘எம்பிரான்’ (தவ நிலை. 33)

‘எனையாளுடைய மாதவன்’ (தவநிலை. 110)

என்பவற்றுள் சிவபெருமானையும் திருமாலைக் கூறி யிருப்பது போலவே தம்மை ஆட்கொண்ட தெய்வ மாகக் கூறியிருப்பது கருதத் தக்கது.

‘இன்னம் பல பலயோனியி லெய்தாநெறி பெறவே
முன்னம் பல ரடிதேடவு முடிதேடவு மெட்டா
அன்னம் பல பயில்வார்புன லணிதில்லையு ளாடும்
பொன்னம்பல நாதன்கழல் பொற்போடு பணிந்தான்’
(தீர்த்த. 18)

‘புள்ளுடைக் கொடியோ ரிருவருங் காணப் புண்ணியன்’
(தவநிலை. 57)

'ஆசறு கடவு ளோர்க்கு மருமறை தமக்கு மொட்டாத்
தேசவன்' (தவநிலை 70)

'ஓரேனந் தனைத்தேட ஒளித்தருளு மிருபாதத் தொருவன்'
(தவநிலை, 87),

'முன்னோன்' (திரௌபதி 80)

'ஆதி' (பதினெட். 212)

என்ற அடிகள், 'மூவரில் முதல்வன் சிவபெருமானே' என்று இவ்வாசிரியர் கொண்டிருந்தனரோ என் பதைக் காட்டுகின்றன.

தவநிலைச் சருக்கத்திலே 78, 107ஆம் செய்யுட் களும், பதின்மூன்றும் சருக்கத்திலே 210-11 ஆம் செய்யுட்களும் சிவனுடைய பரத்துவத்தைக் காட்டுவன.

'சிவமுறமுகூர்த்தம்' (சம்பவ, 67) என்றதில் சிவம் என்ற சொல் மங்களகரம் என்ற பொருளில் வழங்குவதைக் காட்டியுள்ளார். கலைகளுக்கு இறை வன் முருகனென்பதைப் பெரும்பாலும் வைணவர் கள் கூறுவதில்லை; இவர் கூறியிருக்கிறார். (குருகுல,9. புட்ப, 10, பத்தாம்போர், 45 முதலியன). சில சிவ சரிதங்களையும் சைவ சமயகுரவர் நால்வரில் சுந்தர

மூர்த்தி சுவாமிகளையும் குறிப்பிட்டுள்ளார். 'இயல் வாணனை அடிமைக்கொள மெய்யே பொய்யாவண மெழுதும்பதி' என்றதில் குறிப்பிட்டிருப்பது சுந்தர மூர்த்தி நாயனாரின் விஷயமாகும். தாழை மரத்தைச் சிவபெருமானுடைய 'நற்றொண்டர் வடிவம்' என்கின்றார். (பதினேழாம், 20.) கற்றோர் வழிபடும் கடவுள் சிவனே என்று 'கற்றார் தொழும் அருணாசலம்' (தீர்த்த. 15) 'கற்றவர் கருத்தினுற் காண்போன்' (தவநிலை, 80) என்ற அடிகளால் தெரிவிக்கிறார். 'கற்றவர் விழுங்கும் கற்பகக் கனி' என்று தேவாரம் சிவபெருமானைக் குறித்துளது. தேவாரத்தை, 'இளவன் தமிழ்' (தீர்த்த, 20) என்கின்றார்.

வைணவர்கள் கங்கா ஸ்நானத்தைப்பற்றிச் சிறப்பாகக் கூறுவதில்லை. காவிரியையே பலவாறு பாராட்டுவார்கள். இவர் பலவிடங்களிற் கங்கையையும் அதில் நீராடுதலையும் சிறப்பிக்கிறார். (தீர்த்த. 7, இராச. 99.)

சிவபெருமானைத் தவிர, சூரியன் விநாயகர் முதலியவர்களையும் புகழ்ந்துள்ளார். சூரியனை 'மூவர்தம் வடிவாம் முதல்வன்' (பதினேழ், 200.) என்கிறார். காப்புச் செய்யுளில் விநாயகரைப் புகழ்ந்திருப்பது

யாவரும் அறிந்த விஷயமாகும். விநாயகர் கயமுகாசுரனைக் கொன்ற வரலாற்றை உவமை முகத்தால் பாராட்டியுள்ளார். பொதுவாகக் கூறுமிடத்து இவர் எந்தத் தெய்வத்தை வாழ்த்துகிருரோ அச்சமயம் அதனிடம் ஈடுபட்டுத் தம்மை மறந்து அதனை வாயாரப் புகழ்வது இவரது இயல்பு. 'அரியும் சிவனும் ஒன்று' என்பதைப் பலவிடங்களில் நிலைநாட்டியுள்ளார்.

இவர் சைவனுகிய வரபதியாட்கொண்டானேடு பழகிவந்த காரணத்தால் சமய உணர்ச்சியில் தாராள புத்தியைக் கொண்டார் போலும். இதனை உணராமற் சில வைணவர்கள், "சிவபெருமான் விஷயமாக இவர் கூறியிருப்பன வெல்லாம் இவரை ஆதரித்த சைவ மதத்தவனுன வரபதியாட்கொண்டானைத் திருப்தியாக்கவே" என்று கூறுவர்.

சைவரிற் பலரும் இவர்பெருமைக்குப் பங்கமுண்டாக்கும் பலகதைகளை உண்டாக்கிவிட்டனர். இவர் பாரதம் பாடியதற்கு அவர்கள் காட்டும் காரணமே வேறு. அவை பின்னர்க் காட்டப்படும்.

## 7. நூலை இயற்றியதற்குக் காரணம்

வில்லிபுத்தூரர் கவி சார்வபௌமராக வாழ்ந்து வந்த காலத்தில் திருமுனைப்பாடி நாட்டை ஆண்டு

வந்த கொங்கர்குல வரபதியாட் கொண்டானென்பவன் தமிழ் மொழியினிடத்து அதிக ஆர்வமுடையவனுய், முச்சங்கத் தமிழ் நூல்கள் அழிந்து போகாமல் நான்காஞ் சங்கமெனத் தமிழ்மொழியை ஆதரித்துவந்தான். அவன் இப்புலவர் பெருமானை நோக்கி, 'நீயும் நானும் பிறந்த திசைக்கு இசை நிற்பப் பாரதமாம் பெருங்கதையைப் பெரியோர் தங்கள் சிறந்த செவிக்கு அமுதமெனத் தமிழ்மொழியில் விருத்தத்தாற் செய்க' என்று வேண்டிக்கொள்ள இவர் அந்நூலைச் சுருக்கமாகப் புராணமுறையிற் செய்தமைத்தார் என்று பாயிரம் கூறுகிறது.

தாம் பாரத மியற்றப்புகும் காரணத்தைக் காட்டுமிடமாகிய தற்சிறப்புப்பாயிரத்தில் *வில்லியார் மேலே குறித்த காரணத்தைக் காட்டாமல் 'மன்னு மாதவன் சரிதமும் இடையிடை வழங்குமென்னும் ஆசையால் யானும் ஈதியம்புதற் கிசைந்தேன்' என்று குறித்துள்ளார். தாங்கள் நூலியற்றுவதற்குப் பிறகாரணங்களும் உளவாகத் தற்சிறப்புப் பாயிரங்களில் 'ஆசை பற்றி அறையலுற்றேன்' என்று கூறுவது தமிழ் நாட்டில் பெரும்பாலும் எல்லாப் புலவர்களிடத்திலும்

---

*தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்.

காணப்படுகின்றது. ஆட்கொண்டான் தம்மைப் பாடும்படிக் கேட்டுக்கொண்டதாக வில்லிபுத்தூரர் தற்சிறப்புப் பாயிரத்தில் கூறுதலைக் கொண்டே 'ஆட்கொண்டான் இவரைக் கேட்டுக் கொண்டபடி இவர் பாடினரில்லை' என்று சொல்லிவிடல் முடியாது. நூலினுள் பலவிடங்களில் இவர் தம்மை ஆதரித்த அந்த ஆட்கொண்டானைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

சங்க பாரதம் இவர் காலத்தில் இருந்திராது. பிற்காலப் பெருந்தேவனார் பாரதத்தின் பல பகுதிகள் அழிந்து போயிருக்கலாம். இல்லையேல் 'இந்தப் பிற்காலப் பாரதத்தைவிடச் சிறந்த நூல் ஒன்று செய்தல் வேண்டும், இஃது அத்துணைச் சிறந்ததன்று' என்று இவர் நினைத்திருத்தல் கூடும். இந்நினைவின் காரணமாக வில்லிபாரதம் எழுந்ததுபோலும்.

இது நிற்க, வில்லியார் பாரதம் பாடியதற்கு வேறு காரணம் கற்பித்துக் கூறுவாரும் உளர். அவை வருமாறு: வில்லிபுத்தூரரும் இவர் தம் சகோதரரும் சிறந்த புலவர்களாகத் திகழ்வதைக் கேள்வியுற்ற ஆண்டான் பிள்ளை என்னும் அதிகாரி அவர்களில் ஒருவரைக் கொண்டு தமிழில் ஒருபாரத நூலைச் செய்விக்க விருப்பங் கொண்டானும். அச் சகோதரர் மன்னர் உறவு வேண்டாரெனக் கூறக் கேட்டு எப்படி

யும் தன் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு கிழக் கைம்பெண்ணொருத்தியை அழைத்து, "நீ சென்று வில்லிபுத்தூராருக்கும் அவர்தம் சகோதரருக் கும் பகைமையை உண்டுபண்ணி அவர்கள் இருவரும் தாயபாகப் பிரிவினை விஷயமாக வழக்குத் தொடுத்து வருமாறு செய்க. அங்ஙனம் செய்வையேல் நீ தக்க ஊதியம் பெறுவாய்" என்று கூறினனும். ஒரு பாரத நூலைத் தமிழிற் பெறுவதற்குத் தாம் செய்ய நினைத்த இந்தத் தந்திரத்தைக் குறித்துப் பாண்டி மன்னனுக்கு உரைத்து, அவர்தம் உதவியை அந்த ஆண்டான் பிள்ளை நாடி நிற்க, அவன் விருப்பப்படி அவள் சென்று புலவர் சகோதரர்களின் மனைவிமா ருக்குள் கலகத்தை உண்டு பண்ணி விட்டனளாம். அந்தக் கலகம் காரணமாக இருசகோதரரும் குடும்பச் சொத்தினைப் பிரிவினை செய்துகொண்டு வெவ்வேறி டங்களுக்குக் குடிபுக எண்ணினார்களாம். பிரிவினை யில் மனவேற்றுமை தோன்றவே இருவரும் அரச னிடம் சென்று தங்கள் வழக்கைக் கூறிக்கொண்டன ராம். அரசன் அக் காலையில் அவர்களை நோக்கி, "நீவிர் இருவரும் தனித்தனியே பாரதக் கதையைத் தமிழில் பாடல்களாகச் செய்து வருவீர்களானல் பின் னர் நாம் உம் வழக்கைத் தீர்ப்போம் என்றனனும், அவ்விருவரும் எழுதிய நூல்களுள் வில்லியார் எழுதிய

நூலே சிறந்திருந்ததாம். பாரதக் கதையை எழுதிய பின் சகோதரரிருவரும், "தாயபாக விஷயமாக வன்றோ பாரதப்போர் நிகழ்ந்தது. படித்தவர்களாகிய நாம் நமக்குள் கலாம் விளைத்துப் போராடுவது இழிந்த செயலேயாகும்" என்று எண்ணினார்களாம். இச் சமயம் அரசன் அப்புலவர்களிருவரையும் நோக்கித் "தமிழிற் சிறந்ததொரு பாரத நூலைப் பெறும் பொருட்டு நானே இச்சூழ்ச்சி செய்தேன்" என்று சொல்லித் தான் கிழவியை அனுப்பிவைத்தது முதற் கொண்டு நடந்த செய்திகள் யாவையும் புகன்று தக்க சன்மானஞ் செய்து அவ்விருவரையும் மேன்மைப் படுத்தினனும். இவ்வாறு கூறுபவர் புலவர் புராண முடையார்.

மற்றொரு விதமாகக் கூறப்படும் காரணம் வருமாறு: புலவர் பெருமானென்று தம்மைத் தாமே மதித்துக் கொண்டு வில்லியார் தாமிருந்து வந்த தேசத்து அரசனுடைய ஆதரவினால் கவியரசு செலுத்தி வந்தனராம். படித்தவர்கள் என்று வருவோரை எல்லாம் கேள்வி கேட்டுத் தம் வினாக்களுக்கு உரிய விடையளிக்காதவர்களின் காதையறுத்து அவர்களை அவமானஞ் செய்து வந்தனராம். ஒரு சமயம் அவர் திருவண்ணாமலைப் பிரதேசத்துக்குச் செல்ல

நேர்ந்தபோது அங்கே **ஸ்ரீ அருணகிரி நாதர்** தமிழ்ப் புலமையிலும் சைவத்துறையிலும் பிரசித்தியுற்றிருப்பதைக் கேள்வியுற்று அழுக்காறு கொண்டு அப்பெருமானை வாதுக்கழைத்தனராம். அப்பொழுது ஸ்ரீ அருணகிரியார் தாம் கந்தரந்தாதி என்று ஓர் கலித்துறையந்தாதியைப் புதிதாக இயற்றி வருவதாகவும் வில்லியார் அதற்குத் தடையின்றி உரை கூறி வரவேண்டுமென்றும் ஏற்பாடு செய்து கொண்டனராம். அவ்வந்தாதியில் 54-ஆம் கவிக்கு வில்லியார் பொருள்கூற முடியாதவராகவே இருவரும் தாம் முன் செய்துகொண்ட ஏற்பாட்டின்படி தோற்றவராகிய வில்லியார் தம் காதினை இழக்க நேர்ந்ததாம். ஆனால் கருணைக் கடலாகிய ஸ்ரீ அருணகிரி நாதர் அங்ஙனம் வில்லியின் காதை அறுக்க ஒருப்படாது, "இனி நீவிர் எழுந்து செல்லலாம்" என்று கூறி வாளா விடுத்தனராம். திரும்பச் சென்ற வில்லிபுத்தூரர் இடைவழியில் சிவாலயங்களிருப்பதை நினைத்துத் தாம் முதிர்ந்த வைணவராதல் பற்றி அவற்றைப் பார்த்தல் பாவச்செயலாகுமென்றெண்ணித் தம் கண்களை மூடிக்கொண்டு செல்லத்தொடங்கினராம். சிவநிந்தனையால் உடனே அவர்தம் கண்கள் அவிந்து விட்டனவாம். பிறகு அவர் ஸ்ரீ அருணகிரியாரை அடுத்து வேண்ட, அவர், "நீர் சிவபரமாக ஏதே

னும் ஒரு நூலியற்றினால் இழந்த கண்களை மீட்டும் பெறுவீர்'' என்றனராம். அதன்பொருட்டே வில்லியார் பாரத மெழுதி இடையிடையே அதனுள் சிவஸ்துதி செய்தனராம். இது முதற்கொண்டு இவர் "திருப்புகழ் நாதன்றன்பால் தீர்வருஞ் சிநேகனாகி" வாழ்ந்து வந்தாராம். இவ்வாறு காரணம் கற்பித்தவர்கள் வில்லியார்,

> "மன்னு மாதவன் சரிதையும் இடையிடை வழங்கு
> மென்னு மாசையால் யானீ தியம்புதற் கிசைந்தேன்"

என்று கூறியிருப்பதில் மன்னு மாதவன் என்பதனை மன் + உமா + தவன் என்று பிரித்துச் 'சிவ சரிதம் இடையிடை வருவதால் நான் இதைப் பாடுவதற்கு இசைந்தேன்' என்று திரித்துப் பொருள் கொள்ளுவர். வில்லியார் தம் நூலில் ஓரிடத்தில்(தவநிலை, 110,) சிவபெருமானை மாதவன் (மாது + அவன்) என்று கூறியிருப்பது இவர்கள் கூற்றுக்கு அரண் செய்வதாக இருக்கிறது.

வில்லிபுத்தூரரும் அருணகிரிநாதரும் ஒரு காலத்தில் இருந்தவர்கள்தாம். வில்லிபுத்தூரர் போலிப் புலவர்கள் வெளிவரலாகாது என்னும் நோக்கத்தோடு, புலவரென்ற புனைபெயரோடு உலாவி வந்த போலிப் புலவர்களுடன்வாதிட்டு அவர்களின் காது

களை அறுத்தெறிந்தார் என்பதற்குச் சான்ருகத் தமிழிற் சில செய்யுட்கள் வழங்கி வருகின்றன. †அனந்தன் என்ற புலவரோடு வில்லியார் வாதிட்டு அவன் தம் செவிகளை அறுக்கத் தொடங்குகையில் அவர் "என் பெயர்அனந்தன் என்பதை நீங்கள் என் காதுகளை அறுத்து நிலைநாட்டி விடுகிறீர்களே!" என்று சமத்காரமாகக்† கூறியதாகவும் அதனைக் கேட்டு வில்லியார் அவருடைய சமயோசித புத்திக்கு மெச்சி அவர் தம் காதுகளை அறுக்காமல் விட்டுவிட்டதாக ஒரு வரலாறும் உண்டு. இவற்றையெல்லாம் ஆதாரமாகக் கொண்டு எவரோ 'வில்லியாருக்கும் அருணகிரியாருக்கும் வாதம் நிகழ்ந்து அதன் காரணமாகப் பாரதம் எழுந்தது' என்று கட்டிவிட்டனர் போலும்.

---

† அனந்தன் என்பது ஆதிசேடனைக் குறிக்கும். சிறந்த புலவருக்கு ஆதிசேடனை உவமை கூறுவர்; "கல்விதனிற் சேடனிவன்காண்" என்பது காண்க. ஆதிசேடனுக்குக் காதுகளில்லை. "என்னை உலகம் அனந்தன் என்கின்றது; ஆனல் எனக்குக் காதுகளிருப்பதால் நான் அனந்தனுவது எப்படி? நீர் என்காதுகளை எடுத்து விட்டால் நான் உண்மை அனந்தனுய் விடுவேன் (சிறந்த புலவனுய் விடுவேன்)" என்பது சமத்காரப் பொருள்.

## 8. வேறு நூல்கள்

ஸ்ரீ அருணகிரியா ரியற்றிய கந்தரந்தாதிக்கு இவர் உரைவகுத்தார் என்பதற்கேற்ப இக்காலத்தில் கந்தரந்தாதியின் உரைப்பதிப்பொன்று உரையை இவரியற்றியதாக உலவி வருகின்றது. வடமொழியிலுந் தமிழிலும் இவருக்கிருந்துவந்த புலமைத்திறத்தையும் அவ்வுரையின் சிறப்பின்மையையும் உற்று நோக்க, அதனை இவர் இயற்றியதாகக் கூறுவது வீண் அபவாதமேயாகுமென்று தோன்றுகின்றது.

**இராமகாதைத்திருப்புகழ்** என்று ஒரு நூலை இவர் இயற்றினர் என்பர். சந்தக்கவிகள் பாடுதலில் இவர் சமர்த்தர்தாம். மேலும் அருணகிரியார் காலத்திலிருந்த இவர் அப்பெரியாரைப் போன்று தாமும் திருப்புகழ் ஒன்று எழுதியிருத்தல் கூடும். ஆனால் இக்காலத்தில் அத்தகைய நூல் ஒன்றும் இவர் பெயரால் வெளிவந்திலது.

"பைந்துழாய் முடிப் பரமனைப் பலகவித்துறையும்
சிந்தையால் மொழிந்து அன்பர்தம் திருவுளம் பெற்றோன்"

என்று பாயிரம் கூறுவதால் இவர் திருமால் விஷயமாக இன்னும் என்ன என்ன நூல்கள் செய்திருக்கின்றனரோ தெரியவில்லை.

வில்லிபாரதத்தின் சிறப்புப் பாயிரத்தை இவரே இயற்றித் தம்மகனுர் வரந்தருவார் பாடியதாக வெளியிட்டனர் என்று சிலர் கூறுகின்றனர். இவ்வாறு கூறுவோர் தம் கூற்றுக்கு அரண்செய்வனவாக எடுத்துக்காட்டும் காரணங்களாவன.

i "பாயிரத்துக்கும் நூலுக்கும் நடைப்போக்கில் ஒற்றுமை தோன்றுகின்றது."

ii "பாயிரத்திற் காணப்படும் சில சொற்கள், சொற்ருெடர்கள், கருத்துக்கள் அப்படியே நூலிற் காணப்படுகின்றன."*

---

* இவற்றை விளக்க அவர்கள் காட்டும் உதாரணங்கள் :

மழைத்தாரைக்குப் பளிக்குத் தூண் உவமை; பாயிரம் 4 ; காண்டவ. 57.

தம்பமாமதி. பாயிரம் 5 ; குருகுல. 4.

" ஔவை பாடலுக்கு நறுநெய்பால் பெருகி " : பாயிரம். 8 ; தீர்த்த. 16.

அஃறிணைப் பொருள்களைச் சனங்கள் என்றல் : பாயிரம். 8 சம்பவ. 47. முதலியன.

" கமல மாதும் கொற்றவையு மனங்களிப்ப ": பாயிரம். 19 ; குருகுல. 24.

" அகத்தியன் பயந்த அணங்கு தமிழ் "; பாயிரம். 2 ; 16-ஆம் போர்ச். 41.

பாரதத்தை நெடுங்கதை பெருங்கதை என்றல்: பாயிரம். 22-3; தற்சிறப். 4.

மேருவின் புகழ்ச்சி : பாயிரம். 4 ; அணிவகுப்பு. 26 ; 17-ஆம் போர்ச். 32.

கல்நாட்டியமர்பொருதல் : பாயிரம். 20; இராசசூயச். 128.

iii "ஆற்றுச் சிறப்பும், நாட்டுச் சிறப்பும் தம் நூலுள் இல்லாத குறையைத்தீர்க்கத் தாமே சிறப்புப் பாயிரஞ் செய்து அதில் அவற்றைச் சிறப்பித்துள்ளார்."

iv "சிறப்புப் பாயிரம் கூறத் தகுதிவாய்ந்தவருள் ஒருவரல்லாதார் எழுதியதாக இப்பாயிரம் வெளிவந்துளது. வில்லியார் தாமே இயற்றி, இந்த இரகசியம் வெளிவாராதிருக்கத் தம் மகனார் எழுதியதாக வெளியிட்டுள்ளார்."

இவர்கள் சொல்வன சரியான ஆதாரங்கள் ஆக மாட்டா. ஏனென்று ஆராய்வோம்: பாயிரத்துக்கும் நூலுக்கும் நடைப்போக்கில் ஒற்றுமையிருப்பதும் பாயிரத்துட் காணப்படும் சில சொற்கள், சொற்றொடர்கள், கருத்துக்கள் அப்படியே நூலிற் காணப் படுவதுங் கொண்டு இரண்டனையும் செய்தவர் ஒருவரே என்பதற்கில்லை. தந்தையாராகிய வில்லிபுத்தூரர் இயற்றிய பாரதத்தை அவர்தம் மகனாராகிய வரந்தருவார் நன்றாகப் பயின்றிருத்தல் கூடுமன்றே. அப்பயிற்சியின் மிகுதியினால் நூலிலுள்ள கருத்துக்கள் முதலியவற்றை அப்படியே தம் பாடல்களில் அமைத்துள்ளார் என்று ஏன் கூறுதல்கூடாது? இப்பொழுது கூட பலர் எழுதும் கவிகளில் அவர்களுக்குப் பழக்க

மான நூல்களின் சொற்றொடர்களும் கருத்துக்களும் காணப்படுகின்றன அல்லவா !

நூலுள் ஆற்றுச் சிறப்பும், நாட்டுச் சிறப்பும் இல்லாத குறைவைப் போக்கவே அவர் பாயிரம் கூறும் முகத்தால் அவற்றை அதனுள் கூறினார் என்றலும் பொருந்தாது. சில புலவர்கள் நாட்டுச் சிறப்பு முதலியவற்றைப் பொருட்படுத்தாமல் தம் நூல்களை எழுதிச் செல்வதுண்டு. சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களுள், ஒரு சில அடிகள் நாட்டுச் சிறப்பு முதலியவற்றைக் காட்டுகின்றன. சீவகசிந்தாமணியார் தனி இலம்பகங்களாக இச் சிறப்புக்களை அமைக்கவில்லை. இந்த நூல்களின் ஆசிரியர்களைப் போலவே வில்லியாரும் தம் நூலை அமைத்திருக்கிறார் என்று சொல்லல் ஒருவாறு பொருந்தும். இந்திரப் பிரத்தச் சருக்கம், சூதுபோர்ச் சருக்கம், கிருட்டினன் றூதுச் சருக்கம் இவைகளில் நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்பு முதலியவை கூறப்படுகின்றன. மேலும் வில்லி புத்தூரார் தம் நூலை வடமொழியிலுள்ள பால பாரதம் என்ற நூலின் மொழிபெயர்ப்பாக ஆரம்பித்துப் பாடிச்செல்லுகிறார். ச்லோகத்துக்கு ச்லோகம் மொழி பெயர்த்துச் செல்லுகின்றவர் வடமொழி பாலபாரதத்தில் கூறப்படாத ஆற்று, நாட்டு, நகரச் சிறப்புக்களை எங்ஙனம் கூறுவர் ?

சிறப்புப் பாயிரம் கூறுதற்கு உரியவர்கள் இன்னவர் என்பதைக் கூறுமிடத்து இலக்கண நூல்கள்,

“ தன்னு சிரியன் தன்னொடு கற்றோன்
தன்மா ணாக்கன் தகும்உரை காரனென்
றின்னோர் பாயிரம் இயம்புதல் கடனே ”

என்று கூறுகின்றன. வரந்தருவார் வில்லியாரின் மகனார் ஆவர். “ செருக்காக அவன் மைந்தன் வரந் தருவான் இப்பதிகம் செப்பினனே ” என்பது பாயிரத்துள் காணப்படும் விஷயம். தன் மகன் சிறப்புப் பாயிரம் கூறுதல் தகுமா என்ற வினா எழுகின்றது. சிறப்புப் பாயிரம் கூறத் தகுந்தோராகக் கிளத்தப்பட்டவர்கள் யாவரும் தாம் சிறப்புப் பாயிரம் கூறப்புகும் நூலின் ஆசிரியரோடு நெருங்கிய தொடர்புடையவர்கள். அத்தொடர்பினால் அவர்கள் அவ்வாசிரியரின் வரலாறு இயல்பு முதலியவற்றை நன்கு அறிந்திருப்பாரன்றே! அதனாற்றான் சிறப்புப்பாயிரத்தை எழுதும் உரிமை அவர்க்கு உரித்தாயிற்று. மகனும் தந்தையின் தொடர்பைப் பெற்றவனே அன்றோ! ஆதலால் அவனும் தன் தந்தையின் நூலுக்குப் பாயிரங் கூறலாம் என்பது பெரியாருக்குள் ஒப்பமுடிந்த அபிப்பிராயமாகும். மேலும் வரந்தருவார், வில்லியாரிடம் கலைபயின்று அவர்தம் மாணவராகவும் இருந்திருக்

கலாமன்றோ? மாணவர் ஆசிரியரின் நூலுக்குப் பாயிரங் கூறுவதிற்போந்த இழுக்கொன்றுமில்லையே!

அடுத்தபடியாகக் கவனிக்க வேண்டுவது மற்றொன்று உண்டு. வில்லியார் ஒரு சமஸ்தானத்துப் புலவர் திலகமாக விளங்கியவர். அவர் நூலும் சிறந்த நூலாகும். அத்தகைய நூலுக்குத் தக்க பாயிரம் கொடுப்பார் எவரும் இல்லையாகத் தாமே பிறர் பாடியதாகப் பாடிச் சேர்த்துக் கொண்டாரென்பது சிறிதும் பொருத்தமற்ற கூற்றாகவன்றோ இருக்கிறது.

## 9. கல்வி, குணம், பெருமை

வில்லிபாரதத்தை ஒருமுறையேனும் முற்றிலும் படித்துப் பார்ப்பவர்களுக்கு இதன் ஆசிரியர் ஆரியம் தமிழ் இரண்டிலும் நிரம்ப புலமை வாய்ந்தவர் என்பது நன்றாகத் தெரியும். பல நூல்களிலிருந்து செய்யுளடிகளையும் கருத்துக்களையும் இவர் தம் நூலகத்து எடுத்தாண்டுள்ளமை பிற நூல்களில் இவருக்கு நல்ல பழக்கம் இருந்திருத்தல் வேண்டும் என்பதைக் காட்டும்.

புலவர்களிலே பெருஞ்சிறப்பு வாய்ந்தவர்களுக்கு அரசர்கள் அவர்கள் புனைந்து கொள்வதற்காக மணிமுடிகளை வழங்குவது அக்காலத்திலிருந்த ஒரு வழக்க

மாகும். சேக்கிழார் அத்தகைய மரியாதையைப் பெற்றவர் என்று திருமுறை கண்ட புராணம் கூறும். சங்ககாலத்துப் புலவருள் ஒருவர் **பொன்முடியார்** என்று வழங்கப்பெறுவர். வில்லியார் வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா என்னும் ஐந்து பாக்களிலும் வல்லவராய் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நான்கு வகைக்கவிகளுக்கும் அதிபதியாக இருந்து முடி புனைந்து கொண்டாரென்பது,

"ஐந்து பாவுடை நால்வகைக் கவிக்கதி பதியாய்
வந்து வட்டமா மணியினன் மணிமுடி புனைந்து"

என்று பாயிரம் கூறுவதால் அறியப்படுகிறது. இவ்வடிகளிலே, 'நால்வகைக் கவிக்கதிபதியாய்' என்ற தொடருக்கு 'இந்த நான்கு வகைக் கவிகளிலே வல்ல புலவர்களுக்கு அதிபதியாய்' என்று பொருள்கொள்வது இன்னும் சிறப்புடைத்து. 'முடிபுனைந்து' என்பதற்கேற்ப 'அதிபதி' என்றது ஒரு நயம்.

புலவர்கள் முடிபுனைதலே அன்றிப் புரவலர்களால் திருச்சின்னம் போன்ற ஒன்றாகிய காளம் அளிக்கப்பெறுவதும் உண்டு. புலவர்கள் புறப்படுகையில் அவர்களுக்கு முன் கடவுளர்க்குச் செய்யப்படும் மரியாதையாகிய காளம் ஊதப் பெறுதலானது, மக்கள் அவர்களைக் கடவுளரோடு ஒப்ப எண்ணி

மதித்துவந்தமையைக் காட்டும். கவிராக்ஷசராகிய ஒட்டக்கூத்தர் முதலிய பெரிய வித்வான்கள் காளக் கவிகளாக விளங்கினார்கள் என்பது பலருக்குத்தெரிந்த தொன்றாம். வில்லிபுத்தூரரும் ஒரு சிறந்த காளக்கவி யாகத் திகழ்ந்தார் என்பது 'தீரகாகளம் பெறுதலின் யாரினும் சிறந்தோன்' என்ற பாயிரத்தடியால் விளங் குகிறது.

இவருக்குக் கவிசார்வபௌமர் என்ற பட்டப் பேர் வழங்கி வந்துள்ளது. "புரைதவிர் கவிதா சார்வ பூமனென் றொருபேர் பெற்றுத் தரையில்வாழ் புலவ ருள்ளத் தருக்கெலா முருக்குந் தக்கோன்" என்று புலவர் புராணம் இவரைப்பற்றிக் கூறுகிறது. அத் தகைய பட்டப்பேரைப் பெற்றவர்கள் வெகு சிலரே போலும். "முன்காலத்திருந்த முத்தமிழ்ப் புலவர்கள் எவரும் பின்னரொரு வடிவுகொண்டு வில்லிபுத்தூர ராகப் பிறந்தனரோ" என்று உலகம் மெச்சத்தக்க புலமை வாய்ந்தவராக இவர் விளங்கினார் என்றும் தமிழ் நாட்டு மூவேந்தர்களிடமும் வரிசை பெற்றவ ரென்றும் பாயிரங் கூறுகின்றது.

வரபதியாட்கொண்டானை அணுகுவதற்கு முன் னரே இவர் பெருமை பல இடங்களிற் பரவியிருந் தது. 'கற்றார்க்குச் சென்றவிட மெல்லாஞ் சிறப்பு'

என்பதற்கு இவர் எடுத்துக் காட்டாக இருந்தனர். 'எங்கு மிவன் இசைபரப்பி வருநாளில்' என்று தொடங்கும் பாயிரச் செய்யுளே மேலே நான் கூறிய தற்கு ஆதாரமாகும். இவர் பலவிடங்களுக்குச் சென்று அங்கங்கே உள்ள புலவர்களுடன் வாதிட்டுத் தம் புலமைத்திறத்தைப் புலப்படுத்திவந்தனரோ என் பதை ஊகிக்க 'எங்குமிவன் இசைபரப்பி வருநாளில்' என்ற அடி இடந்தருகிறது.

போலிப்புலவரின் காதுகளை இவர் அறுத்து வந் தார் என்ற வரலாறு எவ்வளவு தூரம் உண்மையோ தெரியவில்லை. **தமிழ்விடு தூது** என்னும் பிரபந்தத்தில்,

"..............................மேலோரிற்
பாத்தனதாக் கொண்ட பிள்ளைப் பாண்டியன் **வில்லி**யொட்டக்
கூத்தனிவர் **கல்லாது** கோட்டிகொளும்—சீத்தையரைக்
குட்டிச் **செவியறுத்துக்** கூட்டித் தலைகளெல்லாம்
வெட்டிக் களைபறிக்க மேலாய்" (65 - 7)

என்ற அடிகட்குக் குறிப்புரை வரையும்போது ஸ்ரீமத் மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சுவாமிநா தையரவர்கள், "**இவற்றிற் கூறப்பட்ட செய்திகள் *'குட்டுதற்கோ' எனவரும் தனிப்பாடலை யொட்டி யெழுந்தனபோலும். பெரியோர் பலர்க்கு இக்கதை கள் உடன்பாடல்ல**" என்று குறித்துள்ளமையை

---

*அடுத்த பக்கம் பார்க்கவும்.

நோக்கும்போது வில்லிபுத்தூரார் பிறர்காதுகளை ஒட்ட அறுத்துவந்தமை நம்பத்தக்கதன்றென்று தெரிகிறது.

கல்லாது கோட்டிகொள்பவரை இவர் தண்டித்து வந்ததாகத் தமிழ் விடுதூது கூறுகின்றது. சந்தக்குழிப்பை அமைத்துக் கவிபாடத்தெரியாதாரை இவர் தண்டித்து வந்ததாகப் புலவர் புராணம் உரைக்கின்றது.

### i தமிழ்ப் பற்று

வில்லிபுத்தூரார் தமக்குத் தமிழ் மொழியினிடத்துள்ள அளவுகடந்த பற்றினை நூலிற் பலவிடங்களிற் காட்டி யுள்ளார். தற்சிறப்புப் பாயிரத்தில் 'வண் தமிழ் ஓங்குக' என்று தாம் வாழ்த்தும் பொருள்களுள் தமிழையும் சேர்த்துக்கூறுகிறார். தாம் பாடும் பாரதம்

---

* "குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னிங்கில்லை
குறும்பி யளவாக் காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்று முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவிலாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே."

சொற் சுவை பொருட் சுவைகளிற் சிறந்ததன்ருயி னும் மிகப் பெருமை வாய்ந்த தமிழ் மொழியாற் செய் யப்படுதலின் தம் புன்சொற்களைப் புலவர் பொறுப்பா ராக என்று கூறுகிருர்.

> "தென்சொ லாலுரை செய்தலின்
> செழுஞ் சுவை யில்லாப்
> புன்சொ லாயினும் பொறுத்தருள்
> புரிவரே புலவோர்"

என்பது அவர் வாக்கு. இவ்வடிகட்கு வேறுவகை யாகப் பொருள் கூறுவாரும் உளர். கணவரோடு வதிவாருக்கு இன்பந்தரத்தக்க சந்தனம், முத்து, புல் லாங்குழலோசை, சந்திரன் இவற்றினிடம் அருச்சு னனை நினைந்து வருந்திய பாண்டியன் மகளுக்கு வெறுப்புப் பிறந்ததாகக் கூறுமிடத்தில் தமிழினி மையைக் குழலோசையாக உருவகப்படுத்தி, 'தக்கோ ராய்ந்த தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன் செவிக்கு விட மென்னும்' என்று கூறுகிருர். பாண்டியன் அசுவத்தாமனேடு போர் செய்கையில் அவன் மீது மூன்று அம்புகளை எய்ய, அவை அசுவத்தாமன் மார் பில் நன்ருகப் பதிந்ததற்கு முத்தமிழானது படிப்பார் நெஞ்சில் நன்கு பதிவதை உவமை கூறியிருக்கிருர். 'தங்கள் மூவகைத் தமிழும்போலச் சிலீமுகம் மூன் றும் விட்டான்' (17 ஆம் 110) என்பது அவர் வாக்கு.

சங்கப் புலவரையும் அகத்தியரையும் அவர் பல படியாகப் புகழ்ந்து கூறியிருக்கிறார், சங்கப்புலவர்களை நன்றறிவார், சான்றோர்கள், தக்கோர், தெளிஞர் என்று கூறுகிறார். அகத்தியரை, முழுதுணர்ந்தருள் முனிவரன், சொல்லினுக் குதவி தோய் கைச் சொன் முனி முதலிய தொடர்களாற்புகழ்ந்து, அவர் தமிழைத் தோற்றுவித்தது, கடலையுண்டது முதலியவற்றைப் பாராட்டுகிறார். புலவர்களின் இயல்பைக் கூறு மிடத்து 'யாதினும் கலங்குறாத கலைவல்லோர்' (நிவாத. 125) என்றும், 'பேரவை மூன்றிலும் தளர் விலாதவர்கற்ற கலை கலங்கினும் போர் முகத்து என் மனங்கலங்குமோ ?' (17–ஆம். 184)என்றும் கற்றோ ரின் கலங்காத திடநிலையைப் புலப்படுத்துகிறார். 'மேலளவாது விளங்கிய சொன்மெய் நூலள வாகிய நுண்ணறி வோர்' (புட்ப. 55) என்று அவர்தம் நூலறிவைப் புகழ்கின்றார். உண்மையாக ஒன்றை வருணித்துக் கூறும் இயல்பு புலவருக்கன்றி மற்றெவ ருக்கும் வாய்த்தலரிது என்பதை 'பொருத வீரம் புலவோர்க்கும் அதிசயித்துப் புகலலாமோ,' 'செஞ் சொற் காவிய மாக்கட் கெல்லாம் கருத்துறு கவினிற் றாகி' (சூது, 46) என்பனவற்றால் வெளிப்படுத்து கிறார்.

இவ்வாசிரியருக்குத் தமிழ் நாட்டினிடத்திலும் அந்நாட்டிற் பாயும் ஆறுகளிடத்திலும், தமிழ் வேந்தர்களிடத்திலும் விசேஷமான அபிமானமிருந்ததாகத் தெரிகிறது. தமிழ்நாட்டை 'சித்திக் கொரு வித்தாகிய தென்னாடு' (தீர்த்த, 12) என்கிறார். நளச்சக்கரவர்த்தி காவிரியைப் போன்ற தப்பாத கருணையையுடையவன் (தவநிலை, 24) என்றும், இன்று வயலுழுவீர் புது நீர் வருமென்றுவரி மணலே குறி கூறிட அன்று வரு குட காவிரி, (17–ஆம். 65) என்றும் கூறும் முகத்தால் காவிரிநதியின் பெருமையைப் புலப்படுத்துகிறார். தமிழ் எழுதப்பட்ட ஏடு எதிர்த்துச் செல்லும் பெருமைவாய்ந்தது வைகை (தீர்த்த. 20), நெய்யும் பாலும் பெருக்கெடுத்து ஓடியதும் தன்னில் மூழ்கு வார்க்கு ஏழெழு பிறப்பையும் போக்கக்கூடியதும் பெண்ணைநதி (தீர்த்த. 16) என்று வேறு நதிகளையும் பாராட்டுகிறார்.

தமிழ்நாட்டு ஸ்தலங்களிற் பலவற்றின் வரலாறு முதலியவற்றை இவர் நன்கறிந்திருப்பது தீர்த்தயாத்திரைச் சருக்கத்தால் தெரியவருகிறது.

தமிழ்வேந்தருள் சேரனைக் கூறும்போது 'ஈரேழுலகும் புகழ் சேரன்' (திரௌபதி 45) என்கின்றார்.

பாண்டியன் பராக்கிரமத்தைப் பதினேழாம் போர்ச் சருக்கத்தில் (107-118) அதிகமாகப் புகழ்ந்து கூறுகிறார். அச்சருக்கத்திலேயே, பாண்டியன் அசுவத்தாமனுல் பட்டொழிந்தபின், அந்த அசுவத்தாமனுடன் சோழன் பொருது அவனைப் புறமுதுகிட்டோடும்படிச் செய்தான் (120-134) என்று கூறுகிறார். இதேசந்தர்ப்பத்தில் பகைவர்கள் சோழனைத் 'தொல்லமர்க்கு நீ சென்னி யென்றவன் புகழ்செப்பி மீளவே' என்று வில்லியார் மூவேந்தரில் சோழனையே அதிகமாகப் பாராட்டிக் கூறுகிறார். சென்னி என்பது சோழனைக் குறிக்கும் பெயராகவும், தலைமைவகிப்போன் என்ற பொருளையும் அச்சொல் குறிக்கிறது. அவன் போரில் இறவாமல் 18-ஆம் போரின் முடிவில் பாண்டவரின் பாசறையில் அசுவத்தாமாவின் வேதியால் மாண்டான் என்று கூறுகிறார். அச்சந்தர்ப்பத்தில் இவர், 'பின்னிய சடையோன் வழங்கிய படைமுன் பிழைத்தவர் யாவரே பிழைத்தார்' என்று கூறும்முகத்தால் சோழன் வீரத்தைப் புலப்படுத்துகிறார். மூவேந்தரில் சோழனை மட்டும் அதிகமாக இவர் தம் நூலுட் புகழ்ந்துள்ளமைக்கு, தம்மை ஆதரித்த கொங்கர்குல வரபதியாட்கொண்டான் சோழவரசர்களுக்கு உட்பட்டவனுக இருத்தலை உத்தேசித்து அவனுக்கு உயர்ந்த மரியாதை வழங்க வேண்டுமென்

றலே காரணம் போலும். தமிழ்நாட்டு வேந்தர்களின் போர்த்திறம் வியாச பாரதத்திலாவது அகத்திய பட்டரின் பால பாரதத்திலாவது இவ்வளவு சிறப்பாகக் கூறப்படவில்லை. இவர் தம் நாட்டன்பின் காரணமாக இவ்விஷயத்தை அதிகமாகவே பாராட்டியுள்ளார்.

## iii செய்ந்நன்றி யறிதல்

தம்மை ஆதரித்தோரைப் புலவர்கள் தாம் எழுதும் நூல்களுள் சார்த்துவகையாற் புகழ்வதுண்டு. கம்பர் சடையப்ப வள்ளலையும், புகழேந்தியார் மள்ளுவ மன்னன் சந்திரன் சுவர்க்கியையும், மண்டல புருடர் கிருஷ்ணதேவராயரையும் தத்தம் நூல்களிற் புகழ்ந்துள்ளார்கள். இந்தச் சம்பிரதாயத்தை யொட்டி வில்லிபுத்தூரர் தம்மை ஆதரித்துப் பாரதம் பாடச் செய்த கொங்கர்குல வரபதியாட்கொண்டானைத் தம் பாரதத்தில் இடையிடையே புகழ்ந்து பாராட்டியுள்ளார். இதுமாத்திரமன்றிச் செய்ந்நன்றியைப்பற்றி நூலுள் கதாபாத்திரங்களின் வாயிலாக மிக அழகாகப் பேசுகிருர்.*

*வெளிப். 6; 11-ஆம் போர். 43; 14-ஆம் போர். 145.

## 10. ஆதரித்தவன் வரலாறு

வில்லிபுத்தூரரை ஆதரித்த கொங்கர்குல வரபதியாட்கொண்டான் பெயர் பாயிரத்திலும் நூலினுள்ளும் 'ஆட்கொண்டான், 'கொங்கர் கோன்' 'பாகை வேந்தன்', 'கோவல்சூழ் பெண்ணை நாடன்', 'கொங்கர் பூபதி', 'பாவலர் மானங் காத்தான்' 'கொங்கர்பிரான்', 'தமிழான்', 'ஆட்கொண்டான்,' 'பிறந்துய்யக் கொண்டவன்' என்று பலவாறுகக் காணப்படுகின்றது.

இம்மன்னவனுடைய பரம்பரையினர் கொங்கு தேசத்தவர் என்பது,

'துன்னு மறைப்பொரு ளெல்லாம் பொதிந்து
சுவை முதிர்ந்து
பன்னு புகழ்பெறைந் தாம்வேத மென்னுமப்
பாரதத்தைத்
தென்னன் மொழியிற் சொலச்செய்து கன்னடற்
செற்ற தமிழ்
மன்னன் வலியனுட் கொண்டான்முன்
னேர் கொங்கு மண்டலமே'

என்னும் கொங்குமண்டல சதகச் செய்யுளால் புலனுகிறது. இச்செய்யுளில் 'முன்னேர் கொங்கு மண்டலமே' என்ற குறிப்பினுல் இவன் அரசாண்ட

இடம் இச்சதகம் தோன்றிய காலத்திற் சோழ தேசத்தின் பிரிவாக இருந்திருக்கலாம் என்று ஊகிக்க இடமேற்படுகின்றது. வில்லிபாரதம் பாயிரப்படி இம்மன்னனுடைய நாடு திருமுனைப்பாடி நாடே என்பது தெளிவாகப் புலப்படும் விஷயமாகும். இந்நாட்டில் இவனது அரசிருக்கையாகிய வக்கபாகை இப்பொழுது எந்தப்பெயரால் வழங்குகிறதோ அல்லது அழிந்து பட்டதோ தெரியவில்லை.

இவனைப்பற்றிய பாடல்களிலிருந்து மூன்று விஷயங்கள் புலனாகின்றன. (i) இவனது தமிழ்ப் பற்று போற்றற் குரியதொன்று என்பதும், (ii) இருகையுடைய கற்பகம் போற் கொடையில் மிகுந்தவன் என்பதும், (iii) முடியுடை வேந்தர்க்குமில்லாத சிறந்த வீரம் இவனிடமிருந்ததென்பதும் அம்மூன்று விஷயங்களாகும்.

இவன் காலத்தில் தமிழ்நாட்டிற் சோழ பாண்டியர்களுடைய பலம் குன்றி அம்முடிமன்னர்கள் பெயரளவில் மன்னர்களாக இருந்து அரசு செலுத்தி வந்தனர். விஜயநகர மன்னர்கள் தங்கள் ஆதிக்கத்தைத் தென்னாட்டில் நிலைநிறுத்த முயன்றுவந்த காலம் அது. அக்காலத்திலே சோழநாட்டுக்கு உட்பட்ட

சிறு இராஜ்யங்களின் அதிபதிகளிற் பலர் தங்கள் பலத்தால் தங்கள் அரசரை வென்று சுவாதீனம் பெற விரும்பாமல் இராஜவிசுவாசமுடையவர்களாக அரசருக்குப் பல விஷயங்களில் உதவி புரிந்து வந்தார்கள். இவ்விஷயத்தையே ஸ்ரீமான் **து. அ. கோபிநாத ராவ்** அவர்களும், 'பிற்காலச்சோழர் பலமற்றுப்போகச் சிற்றரசர் ராஜவிசுவாசங் காட்டி அவர்களுக்குத் துணையாக நின்றனர்' என்று சோழவம்ச சரித்திரத்திற் குறித்துள்ளார். அத்தகைய சிற்றரசர்களில் வரபதியாட்கொண்டானும் ஒருவன். இவன் காலத்தில் தமிழ் நாட்டில் வேறு தலைவர்கள் அவ்வளவு பிரசித்தர்களாக இருந்தனர் என்று தெரியவில்லை.

இவன் காலத்திலே சோழவரசனுக்குப் பல பக்கங்களிலும் பகைவர்கள் தோன்றினார்கள். அப்பகைவர்களினின்றும் இந்த வரபதியாட்கொண்டானே சோழனைக் காத்தான்போலும். பாண்டியனை இவன் வென்றசெய்தி பாயிரம் 19-ஆம் செய்யுளால் விளங்கும். தமிழ் நாட்டிற்கு வடபாலிருந்து சிலர் சோழன் மீது படையெடுத்ததாகவும் அச்சமயம் இவன் அந்த வடவரசரைத் தோற்கடித்ததாகவும்

நிரைமீட்சிச் சருக்கம், 103-ஆம் செய்யுளால் தெரிய வருகிறது.*

தமிழ் நாட்டிலே கருநடர் அதிகமாக இக்காலத்திற் குடியேறினர்கள் போலும். தமிழ் மொழி கருநடப்பேர் வெள்ளத்தில் மூழ்கி அழிந்துபடத்தக்க நிலையில் இருந்ததுபோலும். இத்தகைய சந்தர்ப்பத்தில் இவன் ஒரு தமிழ்ச் சங்கத்தை ஸ்தாபித்து நான்காம் சங்கம் என்னும்படி அதனை ஆதரித்து வந்தான் போலும். இவ்வளவும் பாயிரத்தைப் பரிசோதித்ததிலிருந்து ஊகிக்கப்படும் விஷயங்களாகும். இவன் ஏற்படுத்திய நான்காம் சங்கத்தைப்பற்றியாவது அச்சங்கமேறிய புலவர்களைப் பற்றியாவது விவரம் ஒன்றும் புலப்படவில்லை.

இரட்டைப் புலவர்கள் இவன் காலத்தவர்கள் போலும். அப்புலவர்கள் இவன்மீது பாடியதாக ஒரு

---

*கொடிமதிற் பாகை வேந்தன்
கொங்கர்கோன் புரவிக் காலால்
வடதிசை யரசர் தங்கள்
மாமணி மகுடம் போல
அடலுடை விசய னொற்றை
யம்பினல் மீண்டுஞ் சென்று
படவர வுயர்த்த கோவைப்
பண்ணினன் மகுட பங்கம்.

செய்யுள் தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுகின்றது. 'சந்திரனே! நீ ஏன் வானத்திலே இருந்து கொண்டு சரியான உணவில்லாமல் உடல்மெலி கின்ருய்? வக்கபாகையை ஆள்பவனும் தமிழபிமானியுமாகிய கொங்கர்கோன் பக்கல் வந்தால் உனக்கு உணவுப் பஞ்சமில்லை' என்று கூறும் முகத்தால் அவர்கள் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளார்கள்.

'சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்ட ராயன்
தமிழ்க் கொங்கர்கோன்
பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராளி
பக்கத்தி லே
ஊணுக்கு வாராதிருப்பாய் விருப்பாகி
யுயர் வானிலே
வீணுக்கு நின்ருகம் மெலிகின்ற திவ்வாறு
வெண்டிங் களே'

என்பது அச்செய்யுளாகும். வேறு எவரும் இவனைப் பாடியுள்ளதாகத் தெரியவில்லை.

## 11. காலம்

ஒரு புலவரைப்பற்றியும் நூலைப்பற்றியும் ஆராயுங்காலத்து அப்புலவர் இருந்த காலத்தையும் அந்நூல் எழுதப்பெற்ற காலத்தையும் நாம் அவசியம் ஆராயவேண்டும். புலவர்கள் தம் நூல்களுள் தாங்கள்

வசித்துவந்த காலத்துக் கொள்கைகளைப் புகுத்தி யிருப்பார்கள். அக்கொள்கைகள் எவை என்று கண்டுகொள்ள அவர்கள் இருந்துவந்த காலத்தைப் பற்றி நாம் நன்ருக அறிந்திருத்தல் வேண்டும். கால ரீதிக்கேற்பப் பழைய நூல்களுக்குப் புதிய புதிய உரைகள் வகுப்பதும், புதியகொள்கைகளை அமைத்து நூல்களியற்றுவதும் எம்மொழியிலும் காணப்படும் செயல்களேயாகும். எப்பொழுதோ ஸ்ரீகிருஷ்ண பகவானல் அருச்சுனனுக்கு அருளிச் செய்யப்பட்ட பகவத்கீதைக்கு ஸ்ரீமத் சங்கராச்சாரியார், இராமாநுஜாசாரியார், மத்வாசாரியார், தற்கால தேசியவாதிகள் முதலியவர்கள் தத்தம் காலரீதிக்குத் தக்கவாறு உரை கூறியிருப்பது ஈண்டு நோக்கத்தகுந்த விஷயமாகும். நூல்களின் போக்குக்கும் அவை எழுந்த காலத்தின் இயல்புக்கும் சிறிதளவேனும் தொடர்பிருக்குமென் பதைக் காட்டவே இவ்வளவுங் கூறினேன்.

இதனைப்பொருட்படுத்தாது **ஸ்ரீ சங்கரநமச்சிவாயர்**, 'காலத்தை யுணர்தலாற் பெரும் பயனின்மை யின் அஃது ஒரு சாரரார் கொள்ளப் பட்டது' என்று நன்னூற் பாயிரத்திற் கூறியிருக்கிருர். சரித்திர வாராய்ச்சி செய்வோருக்கு இவர் கூற்று விந்தை யாகவே தோன்றுகின்றது!

இந்தக் காலத்திற்முன் **ஸ்ரீ அருணகிரி நாதர்** திரு வண்ணுமலையில் விளங்கி வந்தார். அருணையினிடத்து அத்தெய்வப் புலவருக்குப் பற்றுதல் அதிகமாக இருந்துவந்தது. வில்லிபுத்தூரர் அர்ஜுனன் தீர்த்த யாத்திரை செய்துவந்த ஸ்தலங்களைக் குறிக்குமிடத்தில் அருணுசலத்தை 'உண்மை கற்றூர் தொழு மருணுசலம்' என்கின்றூர். 'உண்மை கற்றூர்' என்றது ஸ்ரீ அருணகிரி நாதரைப்போலும். அருண கிரிநாதப் பெருந்தகையாரும் தம் திருப்புகழில் 'கூறும் காளக்கவிப்புலவோன்' என்றது வில்லிபுத்தூரரையே போலும். இவ்விருவர் தம் கவிதைகளும் வடமொழி நிரம்பிய சந்தக்கவிகளாகத் திகழ்கின்றமையும், வில்லி யாரும் ஸ்ரீ ராம காதை திருப்புகழ் என்று ஒரு நூலி யற்றியுள்ளர், என்ற செய்தியும் இவருக்கும் அருண கிரிநாதருக்கும் வாதம் நிகழ்ந்ததென்ற வரலாறும் பிறவும் இருவரும் ஒருகாலத்தினர் என்பதைக் காட் டும்.

அருணகிரியார் தம் நூலுள் பிரபுட தேவராய ரைப் புகழ்ந்து கூறியுள்ளார். இவர் விஜயநகர மன்னர் வம்சத்துவந்த இரண்டாம் தேவராயராவார். இவர்காலம் கி. பி. 1423—1446.* சேர சோழ

---

* சென்னை ராஜதானிச் சாஸனங்கள், இரண்டாம் சம்புடம், சேலம் ஜில்லா, 52-பார்க்க.

பாண்டியர் பலம் குன்றிவிடவே விஜய நகர வேந்தர்கள் தமிழ் நாட்டில் தங்கள் ஆதிக்கத்தை நிலை நாட்ட முயற்சித்து வந்தகாலம் இது. வில்லிபாரதப் பாயிரம் சுட்டும் காலமும் இதுவே. ஆகையால் வில்லியார் இருந்த காலமும் இதுவேயாகும்.

வரபதியாட்கொண்டானை இரட்டையர்கள் பாடியிருப்பதாக முன்னர்க் கூறினேன். ஆகையால் அவர்களும் இக்காலத்தவர்களாக வேண்டும். அவ்விரட்டையர்கள் காளமேகப்புலவரைப் புகழ்ந்து அவர் இறந்தபோது "வேகுதே மண்தின்றபாணம் என்ற வாய்" என்று கூறி யிருப்பதால் காளமேகப் புலவரும் இக்காலத்தவர் போலும்.

## 12. முதல் நூல் — வேறு ஆதாரங்கள்

நூல்கள் முதல் நூல், வழி நூல், சார்பு நூல், எதிர் நூல் என நான்கு வகைப்படும். வேறு நூல்களைத் தழுவாமல் அறிவிற் சிறந்த பெரியோர்கள் அருளிச்செய்த நூல்கள் **முதல் நூல்** எனப்படும். ஒரு முதல் நூலைத் தழுவி, அதிற் கூறப்பட்ட விஷயங்களை விரித்தோ, தொகுத்தோ, வேறு சில மாறுபாடுகளைப் புகுத்தியோ ஒரு புலவர் தம் கால இயற்கைக்கு ஏற்றபடி எழுதும் நூல் **வழி நூல்** எனப்படும். முதல்-

வழி நூல்களின் முடிபு ஒரு சிறிதளவே தழுவப் பெற்று மற்ற விஷயங்களில் அந் நூல்களோடு தொடர்பில்லாததாக எழுதப்படும் நூல் **சார்பு நூல்** எனப்படும். யாதேனும் ஒரு நூலைக் கண்டித்து அதன் கண்டனமாக எழுதப்படும் நூல் **எதிர் நூல்** எனப் படும்.

இவ்வகை நூல்களில் வில்லி பாரதம் வழி நூலைச் சார்ந்ததாகும். 'இது வழி நூலாயின் இதன் முதல் நூல் யாது?' என்ற வினு எழுகின்றது. வில்லிபுத்தூரர் தம் நூலுள் கூறும் தற்சிறப்புப் பாயிரத்தை நோக்கு வோர், 'இந் நூலின் முதல் நூல் வியாச பாரதமே' என்றெண்ணுவர். தற்சிறப்புப் பாயிரத்தில் இவர்,

"மண்ணி லாரண நிகரென வியாதனுர் வகுத்த
எண்ணி லாநெடுங் காதையை யானறிந் தியம்பல்"

"முன்சொ லாகிய சொல்லெலா முழுதுணர் முனிவன்
தன்சொ லாகிய மாப்பெருங் காப்பியந் தன்னைத்
தென்சொ லாலுரை செய்தலில்"

என்று கூறியுள்ளார். ஆனுல் வியாச பாரதத்துக்கும் இந் நூலுக்கும் கதைப் போக்கில் நெடுவாசி பேத முண்டு. சம்பிரதாயத்துக்காக வில்லியார் இவ்வாறு கூறினரே ஒழிய உண்மையில் இவர் வியாச பாரதத் தைப் பின்பற்றித் தம் நூலை அமைக்கவில்லை.

வடமொழியில் **அகத்தியபட்டர்** என்பவரால் எழுதப்பெற்ற ஒரு பாரத நூல் இருக்கிறது. அது **பால பாரதம்** எனப்படும். பாரதக் கதையை மிகச் சுருக்கமாகக் கூறுவது அந்நூல். தெலுங்கு நாட்டில் உத்தேசமாக இரண்டாம் பிரதாபருத்திரன் காலத்தில் இந்த அகத்திய பட்டர் வாழ்ந்து வந்தார் என்று தெரிகிறது. நான் அப் பால பாரதக் கையெழுத்துப் பிரதியொன்றை வைத்துக்கொண்டு அதனை வில்லி பாரதத்தோடு ஆதிபருவம் முடியச் சோதித்துப் பார்த்தேன். *

அவ்வாறு ஆராய்ந்ததில், 'வில்லிபுத்தூரார் சுலோகத்துக்குச் சுலோகம் சொல்லுக்குச் சொல் அந்நூலையே பெரும்பாலும் தழுவித் தம் பாரத நூலை அமைத்துக்கொண்டனர்' என்று தீர்மானிக்க நேர்ந்தது. ஆதிபர்வம் முழுவதும் இவ்விரு நூல்களிலும் கவி கற்பனை, கதைப் போக்கு, சொற்பிரயோகம் முதலியவைகள் ஒரு படியாகவே இருக்கின்றன. இவ் விஷயத்தை எளியேன் கலைமகள் 9-வது தொகுதி 194–200-ஆம் பக்கங்களில் '**வில்லி பாரதத்தின்**

---

* இவ்விரண்டு நூல்களையும் ஒப்புநோக்கும் விஷயத்தில் எனக்குத் துணை புரிந்தவர்கள் ஸ்ரீமான் **டாக்டர். வே. ராகவன், எம். ஏ., பி. எச். டி.,** அவர்கள் ஆவார்கள்.

**முதல் நூல்**' என்ற கட்டுரையில் விரிவாக விளக்கி யுள்ளேன். அவ்வாராய்ச்சியை நோக்க, வில்லிபாரதத் துக்கு முதனூல் அகத்திய பட்டர் வடமொழியில் எழுதியுள்ள பால பரதமே என்பது புலனாகும்.

இவ்வாராய்ச்சி ஒருபுறமிருக்க, இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள இடைக்காலப் பெருந் தேவனார் பாரதப் பகுதியிலுள்ள பல செய்யுட்களும் உரைப் பகுதியும் பெரும்பாலும் வில்லி பாரதத்தில் பிரதி பலித்திருக்கின்றன. சிலவற்றை உதாரணமாக இங்கே தருகிறேன்.

ஸ்ரீகண்ணபிரான் பாண்டவருக்காகத் தூது செல் லும்போது திரௌபதியை நோக்கிக் கூறுமிடத்தில்,

"உன்கருத்தே முற்றுவிப்பே னொண்ணுதலா யொண்டிறலான்
தன்கருத்தை யான்சென்று சந்தித்தால் — பின்சடையாம்
இக்குழலை நீமுடிக்க எங்தெழிலான் தேவிமார்
அக்குழல்கள் தாம்விரிப்பா ராங்கு" (பெருந். 140)

"தொல்லாண்மைப் பாண்டவர்க்குத் தூதுபோய் மீண்டதற்பின்
நல்லாயுன் பைங்கூந்தல் நானே முடிக்கின்றேன்
எல்லாருங் காண இனிவிரிப்ப தெண்ணரிய
புல்லார்த மந்தப் புரமாதர் பூங்குழலே" (வில்லி. கிருட். 49)

என இரண்டு நூல்களிலும் கருத்தொப்புமை காணப் படுகின்றது.

" கற்றூர்க்கும் நான்மறைநூல் வல்லார்க்குங் கையலந்தொன்
றற்றூர்க்கு மில்லா திரப்பார்க்கும் — பொற்றூழ்
நிறைகூவித் தான்கொடுப்ப நீள்கதிரோன் மைந்தன்
அறைகூவித் தானளித்தா னங்கு " (பெருந். 234)

என்பது,

" வல்லார் வல்ல கலைஞருக்கும்
மறைநூ லவர்க்குங் கடவுளர்க்கும்
இல்லா தவர்க்கு முள்ளவர்க்கும்
இரந்தோர் தமக்குந் துறந்தவர்க்கும்
சொல்லா தவர்க்குஞ் சொல்பவர்க்கும்
சூழுஞ் சமயா திபர்களுக்கும்
அல்லா தவர்க்கு மிரவிமகன்
அரிய தான மளிக்கின்றான் " (வில்லி. கிருட். 235)

என்பதிற் பிரதி பலித்திருக்கின்றது.

" சமரழிந்த நீர்நாடன் காங்கேயன் வந்திங்கண்
அமரொழிந்து புற்கவ்வு மாகில் — உமதுரிமை
மண்ணகமாய்ச் செய்தந்த வாள்வேந்தர் தம்முரிமை
விண்ணகமாய்ச் செய்வேன் விடிந்து " (பெருந். 614)

என்பதும்,

" விற்கவ்வு வாளி யடலைவர் மீது விடலஞ்சி வீர ரெதிரே
புற்கவ்வு மாகில் விரைவோடு கங்குல் புலராமுன் வந்து பொருவேன்
சொற்கவ்வை யாக நினையற்க கொன்று சுரர்நா டளிப்ப னினியுன்
சிற்கவ்வை தீர வவருக்கு நின்ற திருமாலி னுக்கு மெனவே "
(வில்லி. 9-ஆம். 5)

என்பதும் தம்முள் எவ்வளவு பொருத்த முள்ளன வாகக் காணப்படுகின்றன!

சஞ்சய மாமுனி பாண்டவர்பால் தூதுவந்த போது வீமன் அவரிடம் கூறியதாகக் காணப்படும் கருத்து இவ்விரு நூல்களுள்ளும் ஒரே மாதிரியாக இருக்கின்றது. அச்செய்யுட்கள் வருமாறு;

“ஆற்றலுடை யங்க ராசன் முதலாயோர்
நூற்றுவ ரென்னும் பகடுழக்கிச் — சீற்றமுடன்
பாராள வின்னம் பெருதொழிந்த பார்த்திவனை
வீராகம் பண்ணுவிப்பேன் மிக்கு” (பெருந். 372)

“போர தாகிய பூமி சாலையின் வேலை சூழ்தரு பூமியின்
பார மான சுயோத னாதிய ரென்னு நாறு பசுப்படுத்
தீர மான தயாம னத்தொ டிராச சூய மகஞ்செயும்
வீர மாமுனி தன்னை யுங்கள வேள்வி யும்புரி விப்பனே”
(வில்லி. சஞ்சய. 17)

மற்றும், உலூகன் றூதுச் சருக்கத்திற் பலராம னைச் சாத்தகி பழிப்பதாகக் கூறுமிடத்தில், ‘பலராம னுடைய சொற்கள் அவனது வெள்ளிய மேனியை விட மிகவும் வெளுத்திருக்கின்றன’ என்று இவ்விரு நூல்களையும் செய்தவர்கள் ஒரு படியாகவே கூறியிருக் கிறார்கள். அவை வருமாறு;

" மான மணிவரைத்தோள் வாள்வேந்தீர் மற்றிவன்றன்
மேனியிற் காட்டி வெளுத்ததே — தானோர்
அறத்தினு லன்றிறே யன்பொருபா லோடி
மறத்தினுற் கட்டுரைத்த வாக்கு." (பெருந்.)

" இளைய சாத்தகி தமையனை மிகக்கரி
திதய மாயினு நாவில்
விளையு மாற்றநின் றிருவடி வினுமிக
வெள்ளை யாகிய தென்ன." (வில்லி. உலூகன். 4)

பெருந்தேவனார் பாரதத்தின் வசனப்பகுதியில் ஸ்ரீகண்ணபிரான் தம் தூதைத் தெரிவிக்கும் சந்தர்ப்பத்தில்,

'தன் சிறிய தாய் மகனுக்குக் குருவங்கிசம் உல்லங்கியாமல் இராச்சிய முழுதுங் கொடுத்துப் பிரமசாரியாய் வாழ்கின்ற ஸ்ரீ பீஷ்ம வங்கிசத்துள்ளாயிருந்து தரும புத்திராதிகளுக்குத் தம் உரிமை கொடாதிருந்தால்......'

என்று கூறுவதாக அமைந்த கருத்தையே வில்லி புத்தூரார், அதே சந்தர்ப்பத்தில்,

" தந்தை காதலுறு தன்மை கண்டிளைய
தாய்பயந்தவிரு தம்பியர்க்
கிந்த வாழ்வுமர சுங்கொடுத்தவனும்
நின்குலத்தொருவ னிங்குளான்;
முந்த மாநில மனைத்தி னுக்குமுயர்
முறைமை யாலுரிய வரசருக்

கைந்து மாநகரு நீகொடா தொழியில்
என்னதாகுமுன தரசியல்'' (கிருட். 117)

என்று அமைத்துக் கூறியுள்ளார். மற்றும் வில்லி புத்தூரர் தம் நூலுள் சருக்கந் தோறும் முதலிற் கடவுள் வாழ்த்தை அமைத்திருப்பது பெருந்தேவனர் பாரதத்தையே நோக்கிப் போலும்.

மேலும் மற்ருெரு விஷயம் இங்கே கூறப்பட்டிருப்பது நம் கவனத்துக் குரியதாகும். சல்லியன் பாண்டவர்க்குச் சகாயம் செய்ய முடியாதபடி இடை வழியில் துரியோதனனுல் விருந்திடப்பெற்று ஏமாற்ற மடைந்ததைப்பற்றிப் பெருந்தேவனர் பாரதம் 106-9 ஆம் கவிகளிற் கூறிப் பின்னும் மற்ருேரிடத்தில் (கவிகள் 400-3) இதே விஷயத்தைக் கூறியது கூறலாகத் தெரிவிக்கிறது. சல்லியன் விஷயமாக எழுதப்பட்ட இத்தகைய தவறு வில்லி பாரதத்திலும் இரண்டிடங்களிற் காணப்படுகின்றன.*

இவ்விரண்டு நூல்களுள்ளும் இவ்வளவு ஒற்றுமையோடு இலைமறை காய்போல் இரண்டொரு தவறுகளும் இல்லாமற் போகவில்லை. துரியோதனனுடைய தம்பியான விகர்ணனை அபிமன்யு கொன்றதாகப் பெருந்தேவனர் குறிப்பர். வில்லியாருக்கு இவ்

* வெளிப்பாட்டுச். 25-7 ; படையெழுச்சிச். 15-6.

விஷயம் உடன்பாடன்று. நூற்றுவரையும் வீமனே கொல்வதாகச் சபதஞ் செய்தவனன்றோ? அவ்வீமன் கையினாலேயே அவன் மாண்டதாக இவர் எழுதுகிறார். விகர்ணனோடு சண்டை செய்வதற்கு முன் வீமன் அவனை நோக்கி,

"சுடுஉரைக்கன லன்னதுச் சாதனன்
வடுவுரைக்கவு மன்னுரை மன்றிடை
நடுவுரைக்கு நன் நாவுடை யரயுனைக்
கொடுவுரைக்கணை யேவினுங் கொல்லுமோ?"
"பார றிந்து பழிக்குட் படாதநின்
நேரறிந் தும்பொர நெஞ்சியையுமோ
போர றிந்து பொருகவென் றால்நெடுஞ்
சீர றிந்தவர் செய்ந்நன்றி கொல்வரோ?"

(பதினான்காம். 144-5)

என்று கூறி விட்டுப் பிறகு அவன் விருப்பப்படிப் போர் தொடங்குவதாகக் கூறியிருக்கிறார்.

இந்த ஒரு மாறுபாடொழிய மற்றவற்றை நோக்கும்போது வில்லியார் தம் பாரதத்தின் பிற்பகுதியைப் பெருந்தேவனார் பாரதத்தைப்பார்த்து விரித்துக் கொண்டனர் போலும் என்ற எண்ணம் நம்மிடை தோன்றுகின்றதன்றோ?*

---

* அகத்திய பட்டரின் பாலபாரதமும் பெருந்தேவனார் பாரதமும் தம்முள் ஒன்றைத்தழுவி மற்றொன்று எழுதப்பட்டதோ என்ற செய்தி என்னால் இதுகாறும் ஆராயப்படவில்லை.

பெருந்தேவனுர் பாரதத்தின் முற்பகுதி இப்பொழுது கிடைத்திலது. அது வில்லியின் காலத்திலேயே அழிந்திருத்தல் வேண்டும் என்று யூகித்தல் பிழையாகாது, வில்லிபாரதத்தின் முற்பகுதி அகத்திய பட்டரின் பால பாரதத்தையும், பிற்பகுதி பெருந்தேவனுர் பாரதத்தையும் முற்றும் தழுவியிருப்பதைக்கொண்டு, பெருந்தேவனுர் பாரதத்தில் தமக்குக் கிடைக்காத பகுதிகளை வில்லிபுத்தூரர் பால பாரதத்தைப்பார்த்து அமைத்துக் கொண்டார் என்று ஊகித்தல் வேண்டும்.

தமிழிலே பாரதக் கதையைப் பற்றிய சில வழக்குகள் சங்க நூல்களிலேயும் பிற்கால நூல்களிலேயும் பயின்றுள்ளன. அவற்றுள் இருதிறப் பாரதப் படைகளுக்கும் பெருஞ்சோற்றுதியன் என்ற சேரன் யுத்தம் முடியும் வரையிற் சோறளித்தது பிரசித்தமான விஷயமாகும். ஒரு சோழன் பாண்டவர் படைக்கு உணவளித்தான் என்ற வழக்கும் உண்டு. இத்தகைய தமிழ் வழக்குக்களுக்கு வடமொழி பாரதங்களில் ஆதாரம் இல்லை. வில்லிபுத்தூரர் சிறந்த புலமை வாய்ந்தவராக இருந்ததுபற்றித் தமிழ் நூல்களிலே உள்ள அந்தவழக்குக்களை அறிந்திரார்என்பதற்கில்லை. ஆனல் இவர் அவற்றுள் ஒன்றையும் தம் பாரதத்துள் காட்டினரல்லர்.

## 13. செய்யுள் நடை

### (i) நடைகளின் இயல்புகள்

ஒரு நூலின் நடையைக் குறித்து ஆராய்கையில் வடமொழியாளர் நடைப்போக்கை, க்ஷீரபாகம், திராக்ஷாபாகம், கதலிபாகம், நாரிகேளபாகம் என நான்கு கூருக்கி ஒன்றின் மற்ருென்று கடுமையான நடையதாகும் என்று கூறுவர். க்ஷீரபாகத்திலான நூல்கள் எக்காலத்தும் யாவராலும் போற்றிப் பயிலப் படும். இந் நடையையே தெலுங்கர் 'சுலப சைலி' என்று பாராட்டுவர். எளிய நடையின் இலக்கண மென்ன? அதனை இங்கு ஆராய்தல் இன்றியமையாத தொன்ரும். யாவருக்கும் பொருள் விளங்கும் சொற் கள் கடின சந்திகளின்றி இணைக்கப்பட்டு, வகையுளி யின்றிச் சீர்கள் முடியுந்தோறும் பதங்களும் முடிவன வாகக் காணப்படுவது எளிய நடையின் இலக்கண மாகும். மேலும் செய்யுட்கள் ஆற்றுப்போக்கில் அமைந்திருத்தல்வேண்டும். பொருளைச் சிறப்பிக்க வரும் உவமை, உருவகங்கள், பழமொழிகள், பிற அணிகள் விரவினதாய் அஃது இருத்தல்வேண்டும். நகை முதலிய எட்டுச் சுவைகளோடு கூடியதும் யாவர்க்கும் பொருள் விளங்கும் சிலேடை, தொனி களையுடையதுமாகிய நடையை எல்லோரும் பலகால்

போற்றிப் படிப்பார்கள். நல்ல நடைக்குரிய மேற் கூறிய நல்லிலக்கணங்கள் யாவும் ஒருங்கே யமையப் பெற்றிருப்பதனுல் அல்லவா கம்பராமாயணத்தை யாவரும் பாராட்டிப் படித்தும் பிறர் உபந்யசிக்கக் கேட்டும் ஆனந்தித்து வருகிருர்கள் !

மேற்கூறிய நடைக்கு முற்றிலும் மறுதலையானது கடின நடையாகும். திரி சொற்களையே உடையதும், சந்த இன்பத்தின் பொருட்டுச் சொற்கள் சேதிக்கப் பட்ட சீர்களையுடையதும்,கொண்டு கூட்டுப் பொருள் கோள், மொழிமாற்றுப் பொருள்கோள் முதலிய வற்றையுடையதும், யமகம் திரிபு முதலிய சொல்லணி கள் விரவப் பெற்றதும் எந்த நடையோ அக்கடின நடையிலுள்ள நூல்களை ஒரு சிலரே பயின்றுவருவர்.

(ii) **சந்தம்**

வில்லிபாரதத்திலே வடமொழியாளர் கூறும் நான்குவித நடைகளும் காணப்படுகின்றன. சந்தம் மலிந்த கவிகள் இந் நூலிற் பலபலவாகக் காணப் படினும் சந்தக்கவிகளிலே வல்லவரான வில்லிபுத்தூர ருடைய சந்தங்கள் அநேகமாகப் படிப்போருக்கு மருட்சியைத் தருவதில்லை. இசையறிவு வாய்ந் தோருக்கு இத்தகைய கவிகள் பெரும் விருந்தாகவு முள்ளன. சில சருக்கங்கள் திராக்ஷா பாகத்தில் வெகு

அழகாக அமைந்துள்ளன. அப் பாகங்களைத் தமிழ் மக்கள் பல படியாகப் படித்து இன்புற்று வருகிறார்கள். தமிழ்ச் செய்யுட்களைத் தட்டுதலின்றிப் படிக்க முயல்வோர் வில்லி பாரதத்தை ஒருமுறைப் படித்து முடித்து விடுவார்களேயானால் எத்தகைய நூலையும் எளிதிற் படிக்கும் வல்லமை அவர்களுக்கு ஏற்பட்டு விடும்.

சந்த இன்பமமைந்த சில கவிகள் கீழே தரப் படுகின்றன.

" கன்னி யிவள்பிறர் பன்னி ; யெனதிரு
கண்ணின் மணிநிகர் சந்மனும்
மன்னு குலமுதல் ; பின்னை யொருவரும்
மண்ணி லுறுதுணை யின்மையால்
இன்னல் பெரிதுள தென்ன புரிகுவ
தென்ன வறிகில னன்னைகேள் ;
முன்னை மனைநிகழ் தன்ம முனிவனை
முன்னி விடர்நனி துன்னுமால். "

(வேத்திர. 44)

" இல்லெடுத்து விரகினோடு மெமையழைத்து மாயைகூர்
வல்லெடுத்து வருதலான் மறுத்தனன் மகீபனும் ;
சொல்லெடுத்து வைதவாய் துணிப்பனென்று கன்னன்மேல்
வில்லெடுத்த னன்பொறாமல் வீரவாளி விசயனே "

(சூது. 170)

"உரையுடையை கற்றகலை யுணர்வுடையை தக்கமதி
யுளமுடையை மிக்ககிளை யுறவுடையை சத்யகுண
வரையுடையை யெத்திசையும் வழுவற வளர்த்தபுகழ்
வரிசைகொள றத்திளைஞர் வழிபடு மதிப்புடையை
தரைமுழுது முத்தநில வுமிழ்குடை நிழற்றவொரு
தனிநனி புரக்குமுயர் தலைமைபெறு கிற்றிபகை
கரையழிய வுற்றபொழு துயிர்கொடு புறக்கிடுதல்
கடனல வுனக்குநிலை கருதியணி நிற்றியெனவே."

(17–ஆம். 98)

"வன்போர் புரிவெங் கணையங் கர்பிரான்
மறனு லுயர்பே றறனூர் குமரன்
தன்போ லவிளங் கினனு தலினென்
தனுவுங் குனியா துசரங்கள்செலா
அன்போ டியதுள் ளமெனக் கினிமே
லவனே டமர்செய் தலுமிங் கரிதால்
வெங்போ குவலென் றலுமே யிறைவன்
விசையோ டிரதத் தினைமீ ளவிடா." (17-ஆம். 204)

"தொழுவார்தம் வினைதீர முற்கோல மாய்வேலை
சூழ்பாரெயிற்
றுழுவானை நன்னுமை மொன்றாயி னுங்கற்றொ
ருரு வோதினர்
வழுவாத சுரராக நரராக புள்ளாக
மாவாகபுன்
புழுவாக வொன்றிற் பிறந்தாலு நரகிற்
புகார்காணுமே." (நிரைமீட். 1.)

வீர ரசம் ததும்ப இவர் எழுதியுள்ள பாகங்களெல்லாம் பெரும்பாலும் சந்தக் கவிகளாகவே அமைந்துள்ளன. இந்தச் சந்தக் கவிகளிற் பல அடி மடக்காகவும், ஈற்றடி மடக்காகவும் காணப்படுகின்றன.*

சிலவிடங்களிற் கவிகளின் பலசீர்கள் அந்தாதியாக அமைந்து திகழ்கின்றன.† மக்கள் பெயர்களை எதுகையில் அமைத்துச் சந்தக்கவிகள் செய்வது ஒரு சிலருக்கே சாத்தியமானதாகும், வில்லிபாரதத்துள் பலவிடங்களில் இப்புலவர் அந்த ஆற்றலைக் காட்டியுள்ளார், யமகம் திரிபுகளும் ஆங்காங்கே காணப்படுகின்றன.

### (iii) வட சொல்லாட்சி

சந்தக்கவிகளைப் பாடுவோர் தனித்தமிழ்ச் சொற்களைமட்டும் கையாளுவது முடியாத காரியமாகும். வடசொற்கள் சந்தக்கவிகளிலே அதிகமாகக் காணப்படும். வில்லிபாரதத்தில் வடசொற்கள் பலவாருகப் பல்கியிருக்கின்றன.

---

* அடி மடக்குக் குதாரணம் 16-ஆம் போர்ச். 49-63 கவிகள். ஈற்றடி மடக்குக் குதாரணம் அணிவகுப். 8-15 செய்யுட்கள்.

† அந்தாதித் தொடைக்கு உதாரணம் மணிமான்: 50–52; 14-ஆம் போர்ச். 21 – 33 , 17-ஆம் போர்ச். 85 – 95 கவிகள்.

'நாரக்கமல கரசோதி', 'பங்கசாத பரிமளங்கொள் பானுராச சூனு', 'சலதர சஞ்சலாசாலம்', 'கனக சத தள பங்கய முகுள சாலம்', 'அதிசீதள தோயங்கள்', 'பாதகம்' முதலிய வடமொழித் தொடர்மொழிகள் இடம் பெற்றுள்ளன.

ஜமதக்நி என்பதை 'இயமதங்கி' என்றும், பூர்ணம் என்பதை 'பூரம்' என்றும், க்ரோதம் என்பதை 'கோதம்' என்றும், வாகனம் என்பதை 'வாகம்' என்றும், துவாரகை என்பதைத் 'துவரை' என்றும் இவ்வாறு ஆசிரியர் வடசொற்களைத் திரித்து வழங்குமிடங்களும் பல.

சிங்காசனம் என்பதற்குப் பிரதியாக, 'சிங்கவாசனம்' என்றும் பஞ்சாயுதம் என்பதற்குப் பதிலாக, 'பஞ்சவாயுதம்' என்றும் தமிழ் முடிபு பெற்ற சொற்களும், தமிழிற்றிரியவேண்டிய இடத்துத் திரியாது வடமொழி வடிவத்தோடெழுதப் பெற்ற விக்ரமம், க்ரீடை, மந்தாகினீ, கதா போன்ற வார்த்தைகளும் நூலில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

இவர் சில இடங்களில் வடசொற்களை மொழி பெயர்த்துக் கூறுகிறார். பீஷ்மர் என்பதற்கு 'வெருவருந்திறலான்' என்பதும், சுயம்வரம் என்பதற்கு,

'தானேயுவந்து தனித்தார் புனைதல்' என்பதும், நீர் பிறப்பிடம் என்று வடமொழியாளர் வழங்கும் நெருப்பை உணர்த்தும் ஓர் சொல்லை 'அம்மனை'* என்பதும், சுக்ரீவன் என்பதற்கு 'மணிக்கழுத்துடையவன்' என்பதும் இவர்தம் மொழி பெயர்ப்புக்குச் சில உதாரணங்களாகும்,

'இழந்த பொற்றாலி மாதர்' (அமங்கலிகள்), 'அகன்ற மெய்மையுடையான்' (பொய்யன்), 'ஒழிவு செய்கருணைநால்வர்' (கருணையற்ற நால்வர்), 'இல்லா நயனி' (குருடன்), 'அற்றதன் தலைகொண்டவன்' (தலையில்லாதவன்) முதலியன வடநூன் முடிபுபற்றி ஆளப்பட்ட சொற்களாகும்.

ஜனங்கள் ஆட்கள் என்னும் சொற்கள் உயர் திணைப் பெயர்களாகவும் வடநூல் விதிபற்றி இவை அஃறிணை முடிபைப் பெற்றுள்ளன.† உடன்பாட்டைத் தெரிவிப்பதற்கு வடமொழியாளர் 'ஓம்' என்ற சொல்லை ஆளுவர். வில்லிபுத்தூரர் அச் சொல்லை அப்பொருளில் 'ஓமென் றுரைத்தருளி' (கிருட். 40)

* அம்- ஜலம்; மனை-வீடு.

† சனங்கள்: அஃறிணை முடிபுக்குதாரணம். சம்பவ 47; வாரணா. 23; தீர்த்த. 54. ஆட்கள் : அஃறிணை முடிபுக்குதாரணம்- முதற்போர். 30.

என்று குறித்துள்ளார். ஒரு சொல்லே 'இந்திரப் பிரத்தம்', 'அரிப்பிரத்தம்', 'வாசமாபிரத்தம்' என்று பலவாறு உபயோகிக்கப்படுவது முண்டு.

## (iv) வினு விடை

வில்லிபுத்தூரரின் செய்யுள் நடையில் தனி வினுக்களும், விடைகளோடு கூடிய வினுக்களும், ஆங்காங்கே காணப்படுகின்றன. வேறு தமிழ் நூல்களில் இம்முறையைக் காண்பதரிது. வடமொழியில் செய்யுள் நடையில் இத்தகைய வினுவிடைகள் வருதலுண்டு. இவர் வடமொழிப்பயிற்சி மிக்கவ ராதற் பற்றித் தம் செய்யுள் நடையில் வினுவிடைகளைப் புகுத்தியுள்ளார். அவற்றுள் சில வருமாறு:

"ஏதுபட்டன முனிவரர் முதலினேரிதயம்" (வாரணு. 134)
"என்செய்தான் பாண்டு மைந்தன்" (இராச. 9)
"நமர்களால் நவில முடியுமோ முடியாது" (இந்திர. 15)
"தாதையன்றேது செய்தான்.........
அண்ணலை யெதிர்கொள் கென்ருன்" (நிரை மீட். 115)
"முனிவர்சொற் பொய்க்குமோ பொய்யாதே" (உலூக. 12)
"என்பட்டா ளிரங்கி வீழ்ந்தாள்" (கிருட். 160)
"என்செய்தான் முடிவி லோடினன்" (14-ஆம். 191)
"கலங்குமோ கலங்காதே" (17-ஆம். 184)

மேற்காட்டப் பெற்றவை ஒரு சில உதாரணங்களே யாகும். இவ்வாறு பலபல வினுக்கள் நூல் முழுவதிலும் காணப்படுகின்றன.

## 14. சுருங்கச் சொல்லல்

சொல்ல வேண்டியவற்றை மிகவும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தலில் வில்லிபுத்தூரர் அதி சமர்த்தராக இருக்கின்றார். 'பரந்த பாரத நூலைச் சுருக்கமாக ஆக்கித் தருக' என்று வரபதி யாட் கொண்டான் கேட்டுக் கொண்டதற்கியைய இவர் இந் நூலுட் பல கதைகளையும் வரலாறுகளையும் சுருக்கமாகக் குறிப்பிட்டுச் செல்கிறார்.

" இருக்காதி மறைமொழிந்தோ னியம்பியவிப்
 பெருங்கதையை யாருங் கேட்பச்
சுருக்காகப் புராணமுறை சொல்லுகவென்
 றலினிவனுஞ் சொல்ல லுற்றான் "

என்பது வில்லிபாரதத்தின் பாயிரத்துள் கண்டது.

" இருந்ததற் கொருபாட் டப்பா
 லெழுந்ததற் கொருபாட் டோதிப்
பெருந்தொகைப் படுத்து வாரைப்
 பேதையர் வியந்து கொள்வார்
மருந்துறழ் கவியொன் றாற்பல்
 வான்பொருள் தெளிவாச் சொல்லும்
திருந்தியற் பார தச்சீர்
 தெரிபவர் சிலர்தா மன்றே "

என்று **ஸ்ரீ முருகதாசர்** தம் புலவர்புராணத்துள் வில்லி புத்தூராரிடமுள்ள சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் ஆற்றலைக் குறிப்பிடுகிறார்.

"ஏகலைவ னென்றொரு கிராதன்முனி யைத்தனி
இறைஞ்சியிவன் ஏவ லின்வழான்
ஆகலை யடைந்துமிகு பத்தியொடு நாடொறும்
அருச்சுனனை யொத்து வருவான்
மேகலை நெடுங்கடல் வளைந்ததர ணிக்கணொரு
வில்லியென வின்மை யுடையான்
மாகலை நிறைந்தகுரு தக்கிணை வலக்கையினில்
வல்விரல் வழங்கி யுளனால்" (வாரணா. 50)

"சேணாநெறி செல்லா நனி சீறா வமர் வெல்லா
மாணா நிரை மீளாவொரி மைப்போதினில் வந்தான்"
(தீர்த்த. 5)

என மேற்கூறியவாறு கதைகளைச் சுருக்கமாக வில்லியார் குறித்துள்ளார். சில விஷயங்களை முன்னாற் கூற வேண்டுமிடத்துக் கூறாமற் பின்னர்க் கூறியும், முன்னர்ச் சுருக்கமாகக் கூறியதன் விளக்கத்தைப் பின்னேரிடத்திற் காட்டியும் செல்வது இவருக்கியல்பாயுளது.

துரியோதனன் தருமரின் இராசசூய யாகத்துக்குச் சென்றிருந்தபோது அரண்மனையிலிருந்த புனல் வாவியொன்றைத் தரையென மயங்கி அதில் விழுந்துவிட்டான். அதைக் கண்டு வீமனும் திரௌபதியும் நகைத்தனர். அந்நகை துரியோதனனுக்கு வருத்தத்தை யுண்டாக்கியது. இவ்விஷயத்தை வில்லியார்

இராச சூயச் சருக்கத்திற் குறிப்பிடவில்லை; சூது போர்ச் சருக்கத்தில் துச்சாதனன் வாக்கால்,

"......................செல்வநாடுடைய கோமான்
றென்னலங் கெய்த வீமன் நகைத்தது நேயமான
கன்னலின் மொழியாள் மூரல் விளைத்ததும் காண்டி லீரோ"

என்றும்,

"பொன்னைச் சிரிக்கும் பூங்கோயிற்
புனல்வா யிலன் றெங்கள்குல
மன்னைச் சிரித்த செங்கனிவாய்
மாறு திரங்கி யழுதாற்ற"

என்றும் விளக்கியுள்ளார்.

பாண்டவர்கள் வனவாசத்தில் இருக்கையில் அவர்களைக் கண்டு நகையாடத் துரியோதனனும் அவன் சகாக்களும் அவர்களிருந்துவந்த கானகத்தின் ஒரு புறம் வந்து தங்கினார்கள். அச்சமயம் அந்தரவாசிகளாகிய கந்தர்வர்கள் சிலர் அங்கே வந்து துரியோதனனைத் தூக்கிச் சென்று விட்டனர். அருகிலிருந்த கர்ணன்முதலியோர் செய்வதறியாது திகைத்து நிற்ப, வீமன் தருமபுத்திரன் கட்டளைப்படிச் சென்று கந்தருவருடன் போராடித் துரியோதனனை மீட்டுவந்தான். இச்சரிதம் ஆரணிய பருவத்திற் கூறப்பெற வேண்டியிருக்க வில்லியார் இதனை அங்கே கூறாமல் உலூகன் றூதுச்சருக்கத்தில் வீடுமர் கர்ணனை நிந்திக்குமிடத்தில்,

"தாம வெண்குடை நிருபனை யந்தர
சரிதர்கொண் டேகாமல்
வீமன் வெஞ்சிறை மீட்ட நாளி னுந்திறல்
வினைபுரி முனைவென்றாய்" (18)

என்றும், 18-ஆம்போர்ச் சருக்கத்தில் வீமன் துரியோதனனை நிந்திக்குமிடத்தில்,

"கந்தருவ ரன்றுன்னைக் கட்டியதோள் வலிகொண்டோ
சிந்தை தனின் வலிகொண்டோ செருச்செயநீ புகுந்தாயே"
(164)

என்றும் மிகச்சுருக்கமாகக் கூறியுள்ளார்.

பாண்டவர்கள் வனத்திலே தம்வாழ்நாளைக் கழித்துவரத்தொடங்கும்போது சூரியன் அவர்களுக்கு ஓர் அட்சய பாத்திரத்தைக் கொடுத்தருளினான். இச் செய்தி கூறப்படவேண்டிய இடத்திலில்லை. துருவாச முனிசருக்கத்தில் 'அருக்கனுதவு பாண்டத்தி லன்ன முளதோ' என்று கிருஷ்ணபகவான் கூற்றில் இச் செய்தியை வில்லியார் புலப்படுத்தியுள்ளார்.

துரியோதனன் இளமையில் வீமனுக்குச் செய்த தீமைகளைக் குறிக்கும் இடத்தில் இவர்,

"வேறொரு பகற்கழு நிரைத்து வீமனோ
டாறுபாய்ந் திருவரு மாடும் வேலையில்
தேறலான் வஞ்சகந் தேறி வண்டினால்
எறினான் கடந்தரி யேறு போன்றுளான்" (வாரணா. 10)

என்று ஒரு தீய செயலைச் சுருக்கிக் கூறியிருக்கிறார். 17-ஆம்போர்ச்சருக்கத்தில், தருமபுத்திரர் ஸ்ரீ கண்ண பிரானைப் பாராட்டிக் கூறுமிடத்தில்,

“ பொங்கழற் சிந்தைச் சுயோதனன் கங்கைப்
 புனல்விளை யாட்டிடைப் புதைத்த
வெங்கழு முனையில் விழாமலோ ரளியாய்
 வீமனுக் காருயி ரளித்தாய் ” (9)

என்று கூறி முன்சொன்ன வரலாற்றுக்குத் தொடர்புடைய வேறு விஷயங்களை விளங்க வைத்துள்ளார்.

பதினெட்டு அத்தியாயங்களாக உள்ள ஸ்ரீ பகவத் கீதையைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் முதற் போர்ச் சருக்கத்தில் 4 செய்யுட்களில் விளக்கியுள்ளார்.

இவ்வாறே ஆராய்ந்து சென்றால் ஒவ்வொரு தலைப்பும் ஒவ்வொரு பெரிய நூலாக விரிந்து விடும். அதனால் இங்கு வில்லியின் சுருங்கச் சொல்லலுக்கு மேற்காட்டிய சில உதாரணங்களே போதியவை என்று சுருங்கச் சொல்லி இவ்விஷயத்தை முடிக்கிறேன்.

## 15. பழமொழிகள்

ஆன்றோரால் அவர் தம் அனுபவத்தாலறியப் பட்டுப் பரம்பரையாக வழங்கிவரும் தொடர்மொழி

கள் பழமொழிகள் எனப்படும். தமிழ்ப் புலவர்களில் முற்காலத்தவரும் பிற்காலத்தவரும் இப்பழமொழி களை மேன்மையாகப் பாராட்டித் தம் நூல்களிற் பல பழமொழிகளைப் புகுத்தியிருக்கிறார்கள். **முன்றுறை யரையனார்** என்பவர் தம் காலத்து வழங்கிய பழமொழிகளுள் நானூற்றைத் தொகுத்து ஒவ் வொன்றற்கு ஒவ்வொரு செய்யுள் விழுக்காடு **'பழமொழி நானூறு'** என்ற நீதி நூல் ஒன்றை இயற்றியுள்ளார். இந் நூல் சங்க நூல்களில் பதினெண் கீழ்க் கணக்கைச் சார்ந்தது. **திருநாவுக் கரசு சுவாமிகள்** ஒவ்வொரு பழமொழியை அமைத்து ஒவ்வொரு செய்யுளாகத் திருவாரூர்ப் பெருமான்மீது ஒரு பதிகம் பாடியுள்ளார். பிற்காலத்திலே பல சதக நூல்கள் பழமொழிகளை விளக்குவனவாகத் தோன்றி யுள்ளன. அணியிலக்கணத்தார் இப்பழமொழிகளை 'ஒட்டு' அல்லது 'பிறிது மொழிதல்' என்னும் அணி என்று கூறுவர். பிறிது மொழிதலாவது, கருதியதைக் கூறாமல் அப்பொருள் தோன்றப் பிறிதொரு பொரு ளைச் சொல்லுதலாம்.

வில்லி பாரதத்தில் அங்கங்கே பழமொழிகள் பல காணப்படுகின்றன, சில தொடர்கள் பழமொழி களின் சாயையில் திகழ்கின்றன. இவற்றிற் சிலவற்றை

மட்டும் கீழே காட்டியுள்ளேன் :

"அரணி யிடத்திற் பிறந்தன்றோ
அதனைச் செருப்பது அழல் அம்மா" (வாரணா.93)

"புலிதனக்கிடு விடக்கை யொரு பூசை தின்பதுபோல்" (வேத்திர.55)

"பசுத்தோல் போர்த்துப் புலிப்பாய்ச்சல் பாய் வாரோ?" (தவநிலை,95)

"தொடங்கி யான்புரி தீவினை என்னையே சுடுவது" (நச்சு.10)

"ஆருயிர் பொன்றுங்காலை அமிர்தமும் விடமாம்" (ஷை 32)

"தன்னிலந்தனிற் குறுமுயல் தந்தியின் வலிது" (நிரைமீட்.50)

"குற்றமது பார்க்குங்காற் சுற்றமில்லை" (கிருட்ண.17)

"கண்மலரிற் கைபடாதோ?" (ஷை. 18)

"பன்னகந் தனக்கமிர்தங் கொடுத்தாலும்
விடமொழியப் பயன் கொடாதே" (ஷை 25)

"தானறியாதவன் பிறர்போய்க் கற்பித்தா லறிவானோ" (ஷை 29)

"அடாது செய்பவர் படாது படுவர்" (ஷை 251)

"மின்னும விடித்தது" (13-ஆம்.143)

"குரங்குகொள் கோதை போல்" (14-ஆம்.205)

"பெரு நெருப்புக் கீரமில்லை" (15-ஆம்.25)

"கடல் நீந்தி யேறினர்க்குக் கழிகடத்த லரிதோ?" (18-ஆம்)

இவ்வாறு பல பழமொழிகள் நூல் முழுவதும் விரவிக் கிடக்கின்றன.

## 16. உவமைகள்

பொருளை விளக்க வருவன உவமைகளாகும். செய்யுள்வழக்கிலேமட்டுமன்றி உலகவழக்கினுள்ளும் இவ்வுவமைகள் வழங்குகின்றன. உவமைகளைக் காட்டி ஒன்றை விளக்குவதால் அங்ஙனம் விளக்கப் படும் பொருள் மக்களுக்கு எளிதில் விளங்குகின்றன. இக்காரணத்தைக் கொண்டே எல்லா மொழியாரும் உவமைகளை மேன்மையாகப் பாராட்டுவர். 'உவமம் ஒன்றே பல அணிகளாக உருக்கொண்டது' என்பது பலருடைய கொள்கையாகும்.

இவ்வுவமைகளை இலக்கண நூலார் பல பிரிவு களாகப் பிரித்திருக்கிறார்கள். இலக்கண நூல்களிலும் இலக்கிய நூல்களிலும் போந்துள்ள உவமைகளை நாம் உற்று நோக்கினால் உவமைகளை (i) தொடர்பு பற்றிய உவமை, (ii) பொருளுக்கேற்ற உவமை, (iii) சந்தர்ப்பத்துக்கேற்ற உவமை, என முப்பெரும் பிரிவுகளாகப் பிரித்தற்கூடும். புராணகதை யுவமை முதலிய பலவும் இம்முக்கூற்றுள் ஒன்றில் அடங்கும்.

இவற்றுள் தொடர்பு பற்றிய உவமையாவது, கவி, தான் எடுத்துக்கொண்ட பொருளுக்கு அதனோடு தொடர்புள்ள ஒரு பொருளை உவமை கூறுவதாம்.

வில்லிபுத்தூரர் இவ்வகை உவமைகளையே அதிகமாக எடுத்தாளுகிறார். இவ்விதம் ஆளுவதில் அவர் தம் புலமை வெளிப்படுகிறது. தொடர்புபற்றிய உவமைகளுக்குச் சில உதாரணங்களை இங்கே தருகிறேன்.

சூரியன் குந்தியைச் சினந்ததாகக் கூறுமிடத்தில், 'தன்மெய்யினும் மனம்மிகக் கொதித்தனன்' என்கிறார். அரசர்மீது அந்தணர் வெகுண்டெழுந்த போது அவ்வந்தணர்களைத் 'தாம் வளர்த்த கனலே போல்வார்' என்று கூறுகிறார். பாண்டியருக்குக் கயற்கொடி என்பதை உட்கொண்டு பாண்டியன் மகளை, 'தம் கொடிக் கயலைப் புறங்காணும் கண்ணினாள்' என்று குறிக்கிறார். தருமபுத்திரர் அரக்கு மாளிகையினின்றும் தப்பிப் பல தொல்லைகளினின்றும் மீண்டு தலையெடுத்து இராசசூய யாகஞ்செய்து விளங்கிய போது அவரை, 'தன் குலக்கதிர்போல் தேய்ந்தொளி சிறந்தவன்' என்று பகர்கிறார். இங்கே தன் குலக்கதிர் என்றது சந்திரனை. அக்கினி பகவான் ஓர் அந்தணன் வடிவங்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுனர்களின் முன் தோன்றியதைக் கூறுமிடத்தில்,

" இனிய பால்முகந் தொழுக்கு மாகுதியென
இலங்குமுப் புரிநூலும்
தனது வெஞ்சிகைக் கொழுந்தெனப் புறத்தினில்
தாழ்ந்தசெஞ் சடைக்காடும்

புனித வெண்புகை மருங்குசுற் றியதெனப்
புனைந்த வாடையுமாகி
மனித வேதியர் வடிவுகொண் டவரெதிர்
வன்னிவா னவன்வந்தான்'' (காண்டவ. 20)

என்று அந்தணன் வடிவுக்குரிய பூணூல், சடை, வெள்ளுடை இவற்றிற்கு அக்கினிக்குத் தொடர்புள்ளனவாகிய பாலாகுதி, தீக்கொழுந்து, வெண்புகை இவைகளை முறையே உவமை கூறுகிறார். பகைவர் கவர்ந்துபோன பசு நிரையை அருச்சுனன் மீட்டிய சந்தர்ப்பத்தில் விராடனைச்சேர்ந்த இடையர்கள் மகிழ்ந்தமைக்கும் துரியோதனனைச் சேர்ந்த ஆயர் அழுங்கியதற்கும் அவ்விடையர்களுக்குத் தொடர்புடைய பொருள்களைக் கொண்டே உவமை கற்பிக்கிறார். அவ்விடத்தில் இவர் கூறியுள்ள செய்யுள்,

"முந்த வான்றொரு மீட்டலு முற்கவர் பொதுவர்
வெந்த நெய்யென ஆரவ மடங்கினர் மிகவும்;
அந்த நெய்யினிற் பாற்றுளி யுகுத்தென வார்த்தார்
அந்த மச்சர்கோ மகனுடன் வந்தகோ பாலர்'' (நிரைமீட்.55)

என்பதாம். இவ்வாறு தொடர்பு பற்றி வில்லிபுத்தூரார் கூறும் உவமைகள் மிகப்பலவாகும்.

இனி, பொருளுக் கேற்ற உவமையைக் குறிக்கும் போது ஓரிடத்திற் காந்தாரிக்குச் சததள பத்மத்தை (நூற்றிதழ்த் தாமரையை) உவமை கூறுகிறார். 'அவள்

தன் நூறு புதல்வர்களாலும், ஒரு கன்னிகையாலும், திருதராஷ்டிரனுகிய கணவனுலும் விளக்கமுற்ருள்; சததளபத்மத்திலும் நூறு இதழ்களும் ஒரு கன்னிகையும் இருக்கின்றன; பத்மம் சூரியனைக்கண்டு விளக்கமுறுகின்றது,' என்கிருர். தாமரையின் நடுவே உள்ள கொட்டை என்னும் பாகத்தை வடமொழியாளர் 'கர்னிகா' என்பார்கள், அச்சொல்லை இவர் 'கன்னிகை' என்று மாற்றிச் சிலேடைப் பொருளை அதற்கு அமைத்துள்ளார்.

"பின்னிய புதல்வ ராலும் பிறந்தமென் புதல்வி யாலும்
துன்னிய மகிழ்ந ஞலும் துலங்கிய சுபலன் பாவை
தன்னிகர் பரிதி யாலுஞ் சதவித ழாலுஞ் செம்பொற்
கன்னிகை யாலுஞ் சோதி கலந்தசெங் கமலம் போன்ருள்"
(சம்பவ. 81)

என்பது அவர் வாக்கு.

துரியோதனுதியரும் பாண்டவரும் மனவேற்றுமையின்றி ஓரிடத்திலே பயின்று வந்தமைக்குத் தாமரையும் குமுத மலரும் ஒரு தடாகத்தில் ஒருங்கே மலர்ந்திருப்பதை உவமையாக்கிக் காட்டுகிருர். தாமரை பகலில் மலர்வது; குமுதம் இரவில் மலர்வது. ஒன்றுக்கொன்று மாறுபாடான இயல்புடைய இந்த இரு மலர்களையும் தம்முள் மாறுபட்டுள்ள இருதிறத்தார்க்கு உவமை கூறியதில் அழகு புலப்படவில்லையா?

இக்கவிஞர் பெருமான் இதே கருத்தைக் கிருட்டிணன் றூதுச் சருக்கத்தில், 'துரியோதனுதியரும் நாங்களும் கலந்து வாழ்வதற்கேற்ற உபாயமொன்றைக் கூற வேண்டு' மென்று தரும புத்திரர் கண்ணபிரானைக் கேட்டதாகக் கூறுமிடத்தில்,

" கயிரவமும் தாமரையும் கமழ்பழனக்
 குருநாட்டிற் கலந்து வாழ
உயிரனையாய் சந்துபட வுரைத்தருளென்
 ருனறத்தி னுருவம் போல்வான் "

என்கிருர்.

பாண்டவர்களுக்கு ஐந்து பூதங்களையும், ஐம் புலன்களையும், ஐந்துதலை நாகத்தையும் உவமை கூறு கிருர். ஐந்து என்ற எண்ணிக்கைக்காக மட்டு மன்றித் திறமைக்கும் பஞ்சபூதங்கள் பஞ்சபாண்டவர்களுக்கு உவமையாயின.* திறமையாவன: "போற்ருர்ப் பொறுத்தலும், சூழ்ச்சிய தகலமும், வலியும், தெற லும், அளியுமாம்." இக்குணங்களில் ஒவ்வொன்றும் பஞ்சபூதங்களில் ஒவ்வொன்றன் குணமாகுமென்பது புறநானூற்று 2-ஆம் செய்யுளாற் றெரியவருகின்றது.

பாண்டவரும் கண்ணனும் மனமொத்துப் பயின்று வந்தமையைத் தெரிவிக்கையில் "ஐம்புலனும்

---

* பஞ்சபூதங்கள் உவமை : (வாரணுவத.) (தீர்த்த. 87)

மனமும்போல் பாண்டவரும் திருமாலும்' பயின்று வந்தனர்'' (இராசசூய 2) என்று கூறுகிறார். இவர்கள் யுத்தகளத்தைக் குறுகினமையைத் தெரிவிக்குமிடத்து, 'ஐம்புலனும் நெஞ்சமுமொருங்குசென்றென மன்னரைவரும் மாலும் வெஞ்சம முன்னவே' (அணிவகுப். 4) என்று கூறுகிறார். 'ஐம்புலன்களும் போல் ஐவரும் பதிகளாகவும்' என்று திரௌபதி கூறுவதாக இதே உவமையை வேறோரிடத்திற் பெற வைத்தார்.

" பைவருந் தலைகளைந்து படைத்த பன்னகமே போல
ஐவரும் படுதல் நன்றே அங்கர்கோன் படுதல் நன்றே
உய்வருஞ் சமரிலாவி யொருவர்போ யொருவ ருய்யார் ''
(கிருட்டிண. 162)

என்று ஐந்துதலை நாகத்தைப் பாண்டவருக்கு உவமை கூறியுள்ளார்.

" ஐந்து பூதமே நிகரெனப்
புலன்களோ ரைந்துமே யெதிரென்ன
ஐந்து காவுமே பொருவெனப்
பணிமுடி யைந்துமே நேரென்ன
ஐந்துவாளியே யுறழ்வென
வேள்வியோ ரைந்துமே யொப்பென்ன
ஐந்துவாசமே தரமென
ஐவருமைந்து தேர்மேற் கொண்டார் '' (சூது. 77)

இச்செய்யுளில் ஐந்தைந்தாகக் கூறப்பட்ட பல பொருள்கள் பாண்டவர்க்கு உவமையாகப் போந் துள்ளமை காண்க.

பொருளுக்கேற்ற உவமைகளை இவ்வாசிரியர் எடுத்தாளுவதற்கு மேலே காட்டியவை ஒரு சில உதாரணங்களேயாகும். நூல்நெடுக இவ்வாறு பல உவமைகள் காணப்படுகின்றன. அவற்றுள் முக்கிய மானதொன்று இங்கே கூறப்படவில்லை. கொடியோ ளுகிய துரியோதனனுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக் கும் கொடியதாகிய பாம்பை அடிக்கடி இவர் உவமை கூறுவார். இவ்விஷயம் '**துஷ்ட சதுஷ்டயம்**' என்ற தலைப்பின் கீழ் விளக்கப்படுகிறது.

சந்தர்ப்பத்துக்கேற்ற உவமைகளை இவர் கையாளுகிறுர் என்பதற்கு இரண்டோருதாரணங்கள் இங்கே காட்டப்படுகின்றன:

திரௌபதி மாலையிடுதலை விரும்பிச் சென்றவர் களில் அருச்சுனனும் கர்ணனுமே சிறந்த வில்லாளிகள் என்பதைப்புலப்படுத்தி, இவ்விருவருக்கும் வேற்றுமை கற்பிக்கையில் அருச்சுனனை உயர்த்திக் கூறியுள்ளார். கர்ணன் சிலை எடுக்கையில் 'இராவணன் கயிலை மலையை எடுத்ததைப்போல் எடுத்தான்' என்றும்,

அருச்சுனன் எடுக்கையில், 'பரமசிவன் மேருமலையை வில்லாக எடுத்ததைப்போல் எடுத்தான்' என்றும் கூறுகிறார். கயிலையைத்தூக்கி இராவணன் அவதிப் பட்டமையும், சிவபெருமான் மேருவை வில்லாகக் கொண்டபோது திரிபுரமழிந்து அவருக்கு வெற்றி கிடைத்தமையும் இங்கே கருதத்தக்கது. இவ்வுவமை கள் இச் சந்தர்ப்பத்திற்கு எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றன!

துரியோதனன் படைகளைத் துரோணர் அணி வகுத்து நின்றதைக் குறிக்கையில் (14-ஆம். 7) 'தேவா சுர யுத்தத்தில் சுக்கிராசாரியார் அவுணர் படையை அணிவகுத்து நின்றதுபோல் துரோணர் அணிவகுத்து நின்றார்' என்கிறார். அந்தணராகிய துரோணருக்கு அசுர குருவாகிய சுக்கிராசாரியாரை உவமையாகக் காட்டியது பொருத்தமானதேயாகும். முடிவில் அசுரர் வெற்றியுறாமற் போனதுபோல், துரோணர் தலைமையில் துரியோதனன் படைகளும் தோற்றமை இந்த உவமையாற் பெறப்பட்டதன்றோ! பாவியராகிய துரியோதனாதியருக்கு அசுரரை யுவமித்ததும் ஒரு நயம்.

இவ்வாறு கந்தபுராணம், விநாயகபுராணம், இராமாயணம் முதலிய கதைகளைச் சந்தர்ப்பத்துக்

கேற்ற உவமைகளாக இவர் பலவிடங்களிற் கூறிச் செல்லுகிருர்.

## 17. நீதிகள்

இராமாயணம் பாரதம் போன்ற பெரிய காவியங்களிலே கூறப்படும் நீதிகள் இத்தனை என்று கணக்கிட்டுக் கூறுவது இயலாததாகும். ஆயினும் ஒவ்வொரு நூலும் முக்கியமாகச் சில நீதிகளை அடிப்படையாகக்கொண்டு விளங்கும். அவ்வாறு நோக்குங்கால் வில்லிபாரதம் அடிப்படையாகக் கொண்டுள்ள நீதிகள் எவை என்ற வினு எழுகின்றது. 'காதலரோடு ஆடார் கவறு', 'அடாது செய்பவர் படாதது படுவர்,' 'பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்', 'உள்ளதுண்டு' என்பன வில்லியார் அடிக்கடி எடுத்து வலியுறுத்தும் முக்கியமான நீதிகளாகும்.

இவைகளைத் தவிர வேறுபல அரிய நீதிகளையும் வெளியிடுகிருர். அவற்றை வெளியிடும் முறை அழகாக அமைந்துளது. கதாபாத்திரங்களின் வாய்மொழிகளாகவே பெரும்பாலான நீதிகளைத் தோற்றுவிக்கிருர். அடுத்தபடியாக உள்ளவை, வேற்றுப்பொருள் வைப்பணியாக அமையும் நீதிகளாகும். வேற்றுப் பொருள் வைப்பாவது, கதை நிகழ்ச்சியில் ஒன்றைச்

சிறப்புப் பொருளாகக் கூறி நீதியைப் பொதுப்பொருளாகக் கூறி விளக்குவதாம்.

"அஞ்சொன்முனி தானுமிவன் மேலெவரி னும்பெருக
அன்புடைய னாகி யகலான்
நெஞ்சுற வருங்கலைகள் கற்குமவர் தம்மளவில்
நேய மகி ழாதவர்கள் யார்?" (வாரண. 49)

[அஞ்சொல்முனி—துரோணர். இவன்–அருச்சுனன்.]

இதுபோன்றவை வேற்றுப் பொருளணிக்கு உதாரணங்களாகும். உவமைகள் வாயிலாகவும் சில நீதிகளை இவர் புலப்படுத்துகிறார். "இடாதவன் தனமெனக் கரந்தனர்கள் பகைவர்" என்பது இதற்கு ஓர் உதாரணமாகும். எடுத்துக் காட்டுவமையாகக் கூறப்படும் நீதிகளும் உண்டு. 'வயப்புலியை வாலுருவி விடுகின்றீரே!' 'பசுத்தோல் போர்த்துப் புலிப்பாய்ச்சல் பாய்வரோ!' என்று பிறிதுமொழி தலணியிற் கூறப்பட்ட நீதிகளும் 'பொய்யடர்சூது' என்று அடைமொழி வழி கூறப்பட்ட நீதிகளும் இந்நூலில் அங்கங்கே காணப்படுகின்றன, இவர் கூறும் சில நீதிகள் வருமாறு:

"அஞ்சுதரு தீவினையி னலமுது நஞ்சாம்
நஞ்சுமமு தாமுரிய நல்வினையின் மாதோ" (சம்பவ. 100)

"இருளற மதியில வெறித்த தாயினும்
பரிதியை நயக்குமிப் பரவை ஞாலமே" (வாரண. 31)

" ஆவி யார்நிலை பெறுபவர் அரியவான் புகழன்றிப்
பாவி யானதங் கணுகுறு தொழிலினும் பலித்திடும் " (சூது.74)

" ஆம்போ தாகு மதுவன்றி ஆய பொருள்க ளம்முறையே
போம்போ தனைத்தும் போம் " (ஷை 230)

" வடுமனங்கொடு வஞ்சகஞ் செய்பவர்
கெடுவ ரென்பது கேட்டறி யீர்கொலோ " (தவநிலை. 14)

" ஆய்ந்தநூ லறிஞர்க்கீந்த
அரும்பொரு ளென்ன மேன்மேல்
வேந்தர்கோன் பகழி யொன்று
கோடியாய் விளைந்த தெங்கும்
மாந்தர்கைக் கொடாத புல்லர்
வனப்பிலாச் செல்வம் போலத்
தேய்ந்தது வஞ்ச நெஞ்சத்
திறலுடைத் தனுசர் சேனை " (நிவாத. 88)

" செறுப்பதோ இளையவர் செய்த தீமைகள்
பொறுப்பதே பெரும்புகழ் புனித மூர்த்தியே " (மணிமான். 96)

" பொறையெனப் படுவது ஆடவர்தமக்குப்பூண் " (கீசக. 47)

" செறுப்பது பெருமையன்று சிறியவர் செய்ததீமை
பொறுப்பதே பெருமை " (நிரைமீட். 133)

" சீல மற்றவர் சினத்த போது மொரு
தீதி லாதவர் செயிர்ப்பரோ?" (கிருட். 125)

" நறைமலர்க் குழலார் தமக்குமெய் யகலா
நாணமே நலஞ்செய் பூண் " (கீசக. 47)

"பிறர்மனை யவரைப் பெற்றதா யெனவும்
பிறர் பொருள் எட்டியே யெனவும்
பிறர்வசை யுரைத்தல் பெருமையன் றெனவும்
பிறர்துயர் என்றுய ரெனவும்
இறுதியே வரினு மென்மனக் கிடக்கை
எம்பிரா னிவையென வுரைத்தான்" (பழம்பொருந். 17)

"குலமிக வுடைய ரெழின்மிக வுடையர்
குறைவில்செல் வமுமிக வுடையார்
நலமிக வுடைய ரென்னினுங் கல்வி
ஞானமற் பமுமிலா தவரை
வலமிகு திகிரிச் செங்கையாய் முருக்கின்
மணமிலா மலரென மதிப்பேன்" (ஷை 19)

"நின்னி லின்னடிசி லுண்டு நின்னுடன்
வெறுக்க வெண்ணுவது நீதியோ?" (கிருட். 108)

"ஆவது கருதா னுகில் அமைச்சர்சொற் கேளா னுகில்
வீவது குறியா னுகில் விளைவது முணரா னுகில்
நாவது காவா னுகி லவனுக்கா நடந்து போரிற்
சாவது பழுதென் றன்றே சகத்துளோர் சாற்றுகின்றுர்"
(ஷை 142)

"செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமும் சிறிது பேணுர்
சொல்வன அறிந்து சொல்லார் சுற்றமுந் துணையு நோக்கார்
வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணுர்
வல்வினை வலிதென் ருேரார் மண்ணின்மேல் வாழு மாந்தர்"
(ஷை 143)

" எண்மை யாயினுங் கிளை ஞரே யேற்பினும்
இயல்பிலாப் புன் செல்வ ரீயார்
வண்மை யாளர்தம் மாருயிர் மாற்றலார்
கேட்பினு மறுக்கிலா ரன்றே!" (ஷை 246)

" வந்துபிற வாதமனை யில்லைமுலை மாறித்
தந்துபரி யாமலொழி தாயர்களு மில்லை
புந்தியுணர் வற்றவர் புலம்புறுவ தல்லால்
இந்தவுல கத்தறிஞர் யாதினு மயங்கார்" (பதின்மூன். 171)

" கள்ள வஞ்சர்வெங் கருவி செய்யினும்
உள்ள துண்டெனு வுண்மை கூறினன்" (சூது. 138)

" சூரவோர் களைநீ யெனினுங் கொலையிற்
கொடிதென் றுயர்கேள் வியர்கூ றுவரால்" (17-ஆம். 207)

மேற்கூறிய நீதிகளிற் பலவற்றை இவர் வேறு நூல்களிலிருந்து எடுத்தாண்டுள்ளார். இவைபோன்று நூல் நெடுகப் பலவகை நீதிகள் காணப்படுகின்றன.

## 18. துஷ்ட சதுஷ்டயம் *

வில்லி பாரதத்தில் கதாபாத்திரங்களில் துரியோதனனும், அவன் தம்பி துச்சாதனனும், சகுனியும், கன்னனுமாகிய இந்த நால்வருடைய கூட்டமும் துஷ்ட சதுஷ்டயம் என்று வழங்கப்படும். துஷ்டர்களின் நான்மை என்பது இத்தொடரின் பொருளா

* 'கலைமகள்' 10-ஆந் தொகுதியில் இவ்விஷயம் வெளிவந்துளது.

கும். வில்லி பாரதத்திலே பல இடங்களில் இந்நால்வர் ஒருங்கே கூறப்படுவர். இவர்களது இழிசெயலைக் காட்டக்கூடிய இடங்களிலெல்லாம் **வில்லிபுத்தூரர்** இவர்களுடைய பெயர்களை வெளிப்படையாகவும் குறிப்பாகவும் கூறிச்செல்கிறார். இந்தமாதிரி, வில்லி பாரதத்தில் பலவிடங்களில், துஷ்ட சதுஷ்டயப் பிரஸ்தாபம் வருகிறது. அவ்விடங்கள் சுவைப்பட இயற்றப் பெற்றவையாகும்.

திருதராஷ்டிரன் தருமருக்கு இளவரசுப்பட்டம் சூட்டிய பிறகு துரியோதனன் அந்தத் திருதராஷ்டிரனிடம் சென்று,

"இகன்மிகு கன்னனு மென்னிளை யோரும்
சகுனியு முண்டு தகுந்துணை; நெஞ்சில்
உகவை யிலாரொடு றேனினி"

(வாரணவத. 102)

என்று கூறுமிடத்தில் துஷ்ட சதுஷ்டயம் முதன் முதல் குறிக்கப்படுகின்றது.

அடுத்தபடியாக, இந்நால்வரும் இவர் தம் வருக்கமும் ஒரு பாம்பாக உருவகப் படுத்தப்பட்டிருப்பது இவர்களின் இழிவைக் காட்டுகின்றது.

பொதுவாக எம்மதத்தினரும் வஞ்சனை, சூது. வாது முதலிய தீய குணங்களுக்கு உவமையாகப்

பாம்பைக் கூறுவதுண்டு. வில்லிபுத்தூரர் தம் பாரதத்தில் வஞ்சனை, செய்ந்நன்றி கொல்லல் முதலியவற்றைக் கூறுகையில் விஷயத்தைப் பாம்போடு தொடர்பு படுத்திக் கூறுவதுண்டு.

"பன்னகந் தனக்கமிர்தம் கொடுத்தாலும் விடமொழியப் பயன்கொ டாதே" (கிருட். 25)

என்று ஓரிடத்திற் குறிக்கிறார். துரியோதனனை இழிவு படுத்திக் கூறும் இடங்களிலெல்லாம் '**அரவ வெங்கொடியோன்**' என்றும் '**பன்னக துவசன்**' என்றும் அவன் கொடியையும் அவனுடன் தொடர்பு படுத்திக் கூறிச்செல்கிறார். 'அரவக்கொடியை உடையவனுக்கு அரவத்தின் இயல்பு இருக்குமன்றோ' என்பதை மனத்திற்கொண்டு இவ்வாறு கூறுகிறார் போலும். பாண்டவர் அரக்குமாளிகையில் புரோசனனோடு பயின்று வந்தமைக்குப் பாம்பொடு ஒரு மனையில் பயில்வதை உவமை கூறுகிறார். தன்னந் தனியனாய்ப் போர்செய்த சிறுவனான அபிமன்யுவின் வில்லையும் இரதத்தையும் அழித்து, அவனைக் கன்னன் பாதசாரியாகச் செய்ததைக் கூறுமிடத்து இவ்வாசிரியர் கன்னனை, "தன்கைப் பொருகணைப் புயங்கம் போல்வான்" என்கிறார். தன் கையிலே உள்ள அம்பாகிய நாகத்தைப் போன்றவன் என்பது இத்தொடரின் பொருளாகும். காந்தாரி தனக்குக் குழந்தைகள்

பிறப்பதை எதிர் பார்த்துக் காத்திருந்ததை ' ஈற்றளை யடைந்துவைகும் பாம்பெனப் பருவம் நோக்கியிருந் தனள் ' என்று கூறுகிறார். துஷ்டர் நால்வரும் அவர் தம் வருக்கமும் பாம்பாக உருவகிக்கப் பட்டிருக் கிறார்கள்;

" சாலும் வஞ்சச் சகுனியோ டெண்ணிய
நாலு மைந்தரும் நச்செயி றாகவும்
வாலும் மெய்யும் வருக்கங்க ளாகவும்
ஆலும் வெம்பகை ஆடர வானதே"

(திரௌபதி. 100)

என்பது அச்செய்யுள். விஷப்பாம்பிற்கு நான்கு விஷப் பற்களுண்டென்பது அக்காலத்தார் கொள்கை. அதனையொட்டி வில்லியார் துஷ்ட சதுஷ்டயத்தை ஒரு விஷப்பாம்பின் நான்கு விஷப் பற்களாக உருவகப் படுத்தியுள்ளார்.

பாண்டவர்கள் சூது போரில் தோற்ற பிறகு துரியோதனன் அவர்களுடைய பொருளையெல்லாம் தன் வசப்படுத்திக்கொள்வதைக் குறித்து ஆலோசனை செய்ததாகக் கூறுமிடத்து,

" மன்னனும் தம்பி தானும் மாமனும் மாறு வண்மைக்
கன்னனும் தம்மி லெண்ணி"

(சூது. 194)

என்று ஆசிரியர் குறிக்கின்றார்.

துச்சாதனன் திரௌபதியைச் சபையில்கொண்டு வந்து நிறுத்தியபோது,

" நாகம் புனைபொற் றுவசனுடன் நவிலா நின்ற நால்வருமே
சோகம் பிறவா திருந்தார்மற் றொழிந்தார் யாரும் சோகித்தார்"
(சூது. 228)

என்கிறார்.

அபிமன்யு இறந்தபோது துக்கித்தவர்களையும் துக்கியாதவர்களையும் கூறும்போதும் இங்ஙனமே,

" ஈரிரண்டு பெயரொழிய மாறுள்ளார் அழுதிரங்கி
யென்பட் டாரே'' (13—ஆம் போர்ச். 136)

என்று கூறுகிறார்.

பாண்டவர்கள், தாம் சூதில் இழந்தவற்றைத் திருதராஷ்டிரன் மொழிகளால் பெற்றுத் தம் நகருக்குத் திரும்பும் சமயம், சகுனியின் தூண்டுதலால் துஷ்டர் நால்வருங்கூடி ஆலோசித்துப் பாண்டவரைக் காட்டுக்குச் செல்ல ஏவுகிறார்கள். இங்கே வில்லி புத்தூரர்,

" சகுனிசொல் மருகன் கேட்டுத் தம்பியு மங்கர் கோவும்
முகமுகம் நோக்கி யெண்ணி யெம்பிநீ மொழிக வென்றான்''
(சூது. 268)

என்று கூறுகிறார்.

துரோணர், பாண்டவர் தாம் இழந்த இராச்சியத்தைப் பெறுவதற்குச் சில நிபந்தனைகளைக் கூறுமிடத்து,

"மேல்வரு கருமமெண்ணு வெகுளியான் மிக்க வீரர்
நால்வரு மெம்ம னோர்கள் நவின்றன சிறிதுங் கேளார்"

(சூது. 272)

என்று கூறுவதாகக்குறித்துள்ளார். பிறிதோரிடத்தில்,

"ஒழிவுசெய் கருணை நால்வர்" (சூது. 283)

என்கிறார். கருணை ஒழிந்த நால்வர் என்பது இத்தொடரின் பொருளாகும். கருணை இன்மை வடமொழி முறைபற்றி 'ஒழிவு செய் கருணை' எனப்பட்டது.

காளமாமுனிவரைக்கொண்டு பாண்டவரைக் கொல்வதற்கு இந்நால்வரும் சேர்ந்து ஆலோசித்தமையைக் கூறுமிடத்து,

"ஆண்டு மற்றவ ரடைதரு காலையி லரவவெங் கொடியோனும்
மூண்ட ழற்பொறி கன்றிய மனத்தினர் மூவரு முடன்முன்னி"

(நச்சுப். 3)

என்று குறிப்பதோடு அதேசெய்யுளில் இவர்களை 'அருளிலாப் பாவியர்' என்றும் கூறுகிறார்.

எட்டாம் நாள் போரில் தன் தம்பியரில் சிலர் இறந்து பட்டமைக்கு வருந்திய துரியோதனன் பீஷ்மரிடம்சென்று, 'நீர் சேனைத் தலைவராக இருப்பதால்

என் கட்சிக்கு அழிவில்லை என்று எண்ணியிருந்தேன்; இப்பொழுது இப்படி நிகழ்ந்ததே!' என்று இரங்கிக் கூறும்பொழுது பீஷ்மர் அவனுக்கு நல்லுபதேச மொழிகளைச் சொல்லுமிடத்து,

" கால்வரு கவன மான்றேர்க் கன்னனும் கன்ன பாக
மால்வரு கலுழி வேக மாவலான் சகுனி தானும்
நூல்வரு பழுதில் கேள்வி நும்பியும் நீயு மிந்த
நால்வருங் குறித்த எண்ணம் நாளையே தெரியும் ஐயா"

என்று துஷ்ட சதுஷ்டயத்தை அவர் இகழ்ச்சியாகக் கூறித் துரியோதனன் சகவாசதோஷத்தால் கெடுவதைக் குறிப்பிடுகிறார். இந்த இடத்தில் பீஷ்மரானவர் கன்னன், சகுனி, துச்சாதனர்களுக்குக் கொடுத்திருக்கும் அடைமொழிகள் சிறப்புடையனவாயினும், விரோதமாகப் பொருள்பட்டு அவர்களுக்குப் பழிப்பைத் தருவனவாக அமைந்துள்ளமை படித்து இன்புறற்குரிய தொன்றும்.

பீஷ்மர் சேனைத்தலைவராக இருக்கத் தகுதியற்றவர் என்று கருதிய துரியோதனன், கன்னனை அவர் நிலையில் அமைக்க எண்ணி அக்கன்னனை வருவித்ததாகக் கூறும் செய்யுள் துஷ்ட சதுஷ்டயத்தின் இழிவை நன்கு காட்டுகின்றது;

"முன்போ ருடைந்து தனதில் லடைந்த
முடிமன்னன் முன்னை யிரவில்
தன்போலு மாம னவனோடு கேடு
தருதம்பி யோடு கருதிப்
பின்போதில் வண்மை யொழிவானை யோடி
யழையென்று பேச வவனும்
மின்போ லிறந்த விளையோர்கள் பாடு
வினவா விருந்த பொழுதே" (ஒன்பதாம் போர். 2)

என்பது அச்செய்யுள். துஷ்ட சதுஷ்டயத்தைச் சார்ந்த ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையில் இழிவைப் புலப்படுத்துகின்றது இச்செய்யுள். 'முன் போருடைந்து தனதில் லடைந்த' என்றதனால் துரியோதனனுக்கும், 'தன்போலும்' என்றதனால் 'துரியோதனன் எவ்வளவு தீமையுடையவனோ அவ்வளவு தீமையையுடைய' என்று சகுனிக்கும், 'கேடுதரு' என்றதனால் துச்சாதனனுக்கும், 'பின் போதில் வண்மை ஒழிவான்' என்றதனால் கன்னனுக்கும் இழிவு புலப்படுகின்றது. கன்னனுக்கு அஃது இழிவு தருவது எங்ஙன மெனில், கூறுகிறேன்: அவன் நாடோறும் முற்பகலிலேதான் தருமங்களைச் செய்வது வழக்கம்.

" அடுத்த தானமும் பரிசிலு மிரவலர்க்
கருளுடன் முற்பக லளவும்
கொடுத்து நாயகன் புகுந்தனன் நாளைநீர்
குறுகுமி னென்றவன் கொயில்
தடுத்த வாயிலோர்.................." (கிருட். 239)

என்பதனாலும், இந்திரன் வேதியன் வடிவோடு கன்ன னிடம் கவச குண்டலங்களைப் பெற வந்தகாலை, கன்னன் இரவலர்க்கு வழங்கும் நேரமாகிய முற்பகலில் வர இயலாமைக்குத் தன் மூப்பே காரணமென்று அவன் குறிக்கும்,

" தளர்ந்தவென் நடையினல் ஆனதெ பிற்பகல் "

என்ற அடியாலும் கன்னனது இந்த வழக்கம் புலனு கின்றது. 'இரவலர்க்கு வழங்குவதற்குக் காலநியமம் கூடாது; கன்னன் அங்ஙனம் நியமங்கொண்டு பிற்பக லில் வண்மையை நீக்கியிருத்தல் இழுக்காகும்' என்ற கருத்தை உட்கொண்டே வில்லியார் இங்கே 'பின் போதில் வண்மை ஒழிவர்னே' என்று கூறினர்.

மேலே காட்டியவாறு துஷ்ட சதுஷ்டயத்தின் செயலைப் பல விடங்களில் இவ்வாசிரியர் அமைத் திருத்தல் போலவே தருமரின் பொறுமை, அர்ஜுன னது வில்வீரம் முதலிய வேறு பல விஷயங்களையும் அங்கங்கே அமைத்துச் செல்கிருர்.

## 19. மேற்கோளாட்சி

புலவர்கள் பிற நூல்களிலுள்ள கருத்துக்களை யும் சொற்றொடர்களையும் தம் நூல்களில் எடுத்தாளுத லுண்டு. இதற்குப் புறம்பான நூலே இல்லை என்று கூறலாம். கம்பர் தாம் ஒவ்வொரு நூலிலுள்ள ரசமான பாகங்களில் ஒவ்வோ ரகப்பை வாரிக்கொண் டிருப்பதாகக் கூறியுள்ளார் என்று ஒரு வரலாறு தமிழ் நாட்டில் வழங்கி வருகிறது. வில்லிபாரதத் திலும் பல பல நூல்களின் கருத்துக்களும் சொற் றொடர்களும் காணப்படுகின்றன. சில இடங்களில் இவ்வாசிரியர் தாம் எடுத்தாண்டவை பிறருடைய கருத்துக்கள் என்பதைத் தெரிவித்து விடுகின்றார். இவர் எடுத்தாண்ட கருத்துக்கள் திருக்குறள், சிந்தா மணி, கம்பராமாயணம், புறநானூறு, தேவாரம் முதலிய பல தமிழ் நூல்களிற் காணப்படுகின்றன. இவர் அந்நூல்களை யெல்லாம் நன்கு பயின்றவர் என்பதிற் சந்தேகமில்லை. இவர் எடுத் தாண்ட நூல் மேற்கோள்களின் ஒப்புமைப்பகுதிகளை யெல்லாம் இங்கே காட்டுவது இந்த ஆராய்ச்சியை வீணே பெருக்குவதாக முடியும். அதனாற் சில சில உதார ணங்களை மட்டும் இங்கே காட்டுகிறேன்:

திருக்குறளிலிருந்து இவர் எடுத்தாண்டவை களிற் சில வருமாறு:

" தொழுத கையுளும் படை யுள " (வாரணா. 119)

" தொழுத கையுளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுத கண்ணீரு மனைத்து " (குறள், 828)

" தீயினாற் சுட்ட புண்ணுள் ளாறு மத் தீயிற் றீய
வாயினாற் சுட்ட மாற்ற மாறுமோ வடுவே யன்றே ?"
(சூது. 267)

" தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
வாயினாற் சுட்ட வடு " (குறள், 129)

" யாதொரு கருமமேனும் எண்ணியே துணிக வென்றும்
காதலிற் றுணிந்து செய்தால் எண்ணுதல் கடனன் றென்றும்
ஓது நூற் புலவர் சொன்னார் " (சூது. 266)

" எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு " (குறள், 467)

" ஈன்றவப் பொழுதி னேகை யெண்மடங் காக வீரச்
சான்றதன் மகனைக் கண்டு மகிழ்ந்தனள் " (நிரைமீட். 134)

" ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய் " (குறள், 69)

வேறு நூல்களிலிருந்து இவர் எடுத் தாண்ட மேற்கோளுக்குச் சில உதாரணங்கள் வருமாறு:

" அஞ்சுதரு தீவினையி னலமுது நஞ்சாம்
நஞ்சுமமு தாமுரிய நல்வினையின் மாதோ " (சம்பவ. 100)

" நல்வினை யுடைய நீரார் நஞ்சுணி னமுதமாகும்
இல்லையே லமுது நஞ்சாம் " (சீவக. 2314)

" சங்கை யுண்டினி யுண்டியுஞ் சாந்தமும் பூணும்
பொங்கு நுண்ணிழைத் துகிலுமங் தாமமும் பூவும்
இங்கி வன்பரிந் தியற்றிய கோடல மென்றூர் " (வாரண. 120)

" வண்ணப்பூ மாலை சாந்தம் வாலணி கலன்க ளாடை
கண்முகத் துறுத்தித் தூய்மை கண்டலாற் கொள்ள வேண்டா
அண்ணலம் புள்ளோ டெல்லா வாயிரம் பேடைச் சேவல்
உண்ணுநீ ரமிழ்தங்காக்க யூகமோ டாய்கவென்றான் "
(சீவக. 1893)

" வயப்புலியை வாலுருவி விடுகின்றீரே " (சூது. 265)

" புலியை அகப்படுத்திக்கொண்டயான் அதனை வாலுருவி
விட்ட தப்பும் என்னை நலியா நிற்கும்?" (சீவக. 2197 உரை.)

" காமு டைப்புறக் கழைகளின் றுளைதொறுங்
கால்பாங் திசைக்கின்ற, எழிசைக்கு " (காண்டவ. 29)

" ஆடமைக்குயின்ற அவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாக " (அகநா. 82)

" தும்பிவாய் துளைக்கப் பட்ட கீசகம் வாயுத்தன்னால்
வம்பவாய் குழலி னேங்க " (சூளாமணி, சீய. 194)

" அநேக மாயிரம் பேர்படக் கவந்தமொன்றாடும்
அக்கவந்தங்கள்
அநேக மாயிர மாடவெஞ் சிலைமணி யசைந்தொரு
குரலார்க்கும்
அநேக நாழிகை யருச்சுனன் சிலைமணி
யார்த்ததக் களம்பட்ட

தநேக மாயிரம் விருதரை யளவறிந்
தார்கொலோ உரைக்கிற்பார் !" (14-ஆம். 48)

" ஆனை யாயிரந் தேர்பதி னாயிரம்
அடர்பரி யொருகோடி
சேனை காவல ராயிரம் பேர்படிற்
செழுமணிக் கவந்தமொன் றாடும்
கான மாயிர மாயிர கோடிக்குக்
கவின்மணி கணிலென்னும்
என வம்மணி யேழரை நாழிகை
யாடிய தினிதன்றே" (கம்ப. மூலபல. 228)

" என்மு னென்மு னென்று மன்னர்
யாரும் யாரும் நவிலவே
முன்மு னின்றி யாவ ரோடு
மூரி வில்வ ணக்கினான்" (15-ஆம். 5)

" என்னேரின னென்னேரின னென்றியா வருமெண்ணப்
பொன்னேர்வரு வரிவிற்கரத் தொருகோளரி பொருவான்"
(கம்ப. மூலபல. 116)

" அதிரதர் தம்மை யெண்ணி லணிவிரல் முடக்க லொட்டாமுனி"
(கிரைமிட். 91)

" மற்றையணி விரல்முடக்க வினையிலாத மத்திர பூபனை"
(17-ஆம். 31)

" வில்லாளரை யெண்ணில் விரற்குமுன் நிற்கும் வீரன்"
(கம்ப. நாகபாச. 5)

'பூளைவன மொத்தனர் பொரும் பொருந ரெல்லாம்' (மணிமான். 44)

'யாரும்வெடி பூளைவன மென்னவொரு தானே
யூருமொரு தேரனில மொக்குமென நின்ருன்' (முதற். 54)

'ஆளை யாவுனக் கமைந்தன மாருத மறைந்த
பூளை யாயின கண்டனை' (கம்ப. முதற். 256)

'வீரசாப முடனுரைக்கும் வெய்ய சாபம்' (2-ம். 10)

'கொடும் உரைக்கணை' (14-ஆம் 144)

'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' (கம்ப. தாடகை. 73)

## 20. சில கொள்கைகள்

பிறநூல்களுட் காணப்படாமல் இவர் எடுத்துக் கூறும் சில அம்சங்கள் வில்லிபாரதத்துள் காணப்படுகின்றன. அவற்றுள், கதை சம்பந்தமான சிலவற்றையும் இலக்கண சம்பந்தமான சிலவற்றையும் இங்கே தருகின்றேன்;

சிவபெருமான் செவிகளிலே இரண்டு கந்தர்வர்கள் தோடாக இருந்துகொண்டு கீதம் பாடி வருகிருர்கள் என்ற விஷயம் சைவநூல்கள் பலவற்றுள் காணப்படுவதாகும். நாரதர் திருமாலடியாரிற் சிறந்தவரென்பதும் ஹரிநாமஸ்மரணை செய்வதே அவர் தம் பொழுதுபோக்கென்பதும் பல இடங்களிற் காணப்படும் செய்தியாம். அங்ஙனமிருக்க வில்லிபுத்தூரர்

நாரதர் சிவபெருமான் செவிகளிலே யிருந்துகொண்டு கீதம் பாடுகிறார் என்றும், அப்பெருமான் கூத்தாடும் சமயங்களில் அக்கூத்துக்கிசைய அவர் பாடுதலுமுண்டென்றும், கயிலையில் அவர் பாடிக் கொண்டிருப்பர் என்றும் கூறுகிறார்.*

அநுமனுடைய காதுகளில் உள்ள குண்டலங்கள் திருமாலுக் கன்றி மற்றவர்களுக்குப் புலனாக மாட்டா என்று கூறுகின்றார்.† இச் செய்தி வேறு எந்நூலிற் கூறப்பட்டுளதோ தெரியவில்லை.

பகாசுரனோடு போர் செய்யும்போது வீமன் விசுவரூப மெடுத்ததாக இவர் கூறியிருக்கிறார்.‡ விசுவரூபமெடுக்க வல்லவர்களில் வீமனும் ஒருவன் என்று நூல்கள் குறிக்கவில்லை. இவர் இங்ஙனம் கூறியதற்கு ஆதாரம் எந் நூலில் இருக்கிறதோ தெரியவில்லை.

---

* நாரதர் செய்தி: இந்திர 42; இராச. 11; 13-ஆம். 203. கண்ணுதற் பெருமான் காதுகளில் நாரதர் தும்புரு என்ற இருவரும் கானம் பாடிக்கொண்டிருக்கும் செய்தி கல்லாடம் 44-ஆம் பாடலிலும், திருவாரூர்க்கோவை 79-ஆம் பாடலிலும் காணப்படுகின்றது.

† புட்பயாத்திரைச். 23.

‡ வேத்திரகீய. 51.

சூரியனுடைய தேரிற் பூட்டிய குதிரைகள் ஏழும் பச்சை நிறமுடையன வென்று* ஓரிடத்தும், பல நிறங்களை யுடையன வென்று† பிறிதோரிடத்தும் கூறுகிறார்.

வெட்சி, வஞ்சி, தும்பை முதலிய மாலைகளைச் சூடுதல் தமிழ் வேந்தர்க்கும் அவர் தம் படைகளுக்குமே உரியதொன்றாம். வடநாட்டு மன்னராகிய பாரதவீரர்கள் இப் பூக்களைச் சூடிக் கொண்டு போர் புரிந்தனர் என்று இவர் பலவிடங்களிற் கூறுகிறார். புறநானூறு, கம்ப இராமாயணம் முதலிய நூல்களிலும் இச்சம்பிரதாயம் காணப்படுகின்றது.

ஆறாம் வேற்றுமை 'அது' உருபு அஃறிணை ஒருமைப்பெயரையே கொண்டு முடியும். உயர்திணைப் பெயரையும், அஃறிணைப் பன்மைப் பெயரையுங் கொண்டு முடியாது. அவ்வேற்றுமையில் 'அ' உருபு பன்மைப் பெயரையேகொண்டு முடியும். இவர் இவ் விதியைக் கவனித்துச் செல்வதாகத் தோற்றவில்லை. சில உதாரணங்கள் வருமாறு; 'அவனது இரு பதத்திடை' (குருகுல. 132), 'எமது தோழன்' (காண்டவ, 51), 'பிஞ்ஞகன் றனது இரும்பகழிகள்' (தவநிலை. 48)

* காண்டவ. 1. † 12-ஆம். 82.

'தனது தாளிணை' (நாடுகரந்த. 11)
'தன தென்றலங் தேர்மேற் கொண்டானே' (காண்டவ. 3)

நினது, உமது என்னும் குறிப்பு முற்றுக்கள் ஒருமை எழுவாய்க்கே பயனிலையாக நிற்கப்பெறும். இவர் பன்மை எழுவாய்க்கு இப்பயனிலைகளைக் கொடுத்துள்ளார்.

'யாவையும் நினது' (குருகுல. 45)
'தேரும்........... தனமும் உமதென்று' * (திரௌபதி. 97)
என்பவை சில உதாரணங்களாகும்.

ஏவல் ஒருமைவிகுதியாகிய இகரம் வரவேண்டிய சில சந்தர்ப்பங்களில் ஏவற் பன்மைவிகுதியாகிய மின் உபயோகிக்கப்பட்டுளது.

'வம்மின் உருள்தடங்தே ரோய்' (கீசக. 58)
என்பதோர் உதாரணமாகும்.

'ஒரு நாவுக் கடங்காது; ஆயிர
மாயிர முண்டானல் அதற்கு மடங்காதே' (நச்சு. 20)
என்ற அடிகளுள் அவற்றிற்கு என்று வரவேண்டிய இடத்தில் அதற்கு என்ற சொல் ஆட்சிபெற்றுள்ளது.

---

* 'உமவென்று' என்று இருத்தல்வேண்டும். அச்சுப் பிரதிகளிலெல்லாம் 'உமதென்று' என்றே காணப்படுகின்றது.

ஒருவர் கூறுவதாக அமைக்கும் தொடர் மொழிகளைக் கூறவேண்டும் சந்தர்ப்பங்களில், அம்மொழிகளைக் கூறிவிட்டு 'என்று கூறினர்' என்று முடிபு கொடுத்து வாக்கியப்பொருளை முற்றுவித்தல் வேண்டுமன்றோ? வில்லிபுத்தூரர் இங்ஙனம் முடிபு கொடாமற் சிலவிடங்களிற் கூறியுள்ளார்.* சம்பாஷணைவடிவில் அமைந்த கவித்தொகையில் முடிபில்லாமல் இத்தகைய 'தன்கூற்று மொழிகள்' காணப்படுகின்றது சகஜமே. ஆனல் வில்லிபாரதம் சம்பாஷணை நூல் அல்லவே! கம்ப ராமாயணத்திலும் ஒரோவிடத்து இம்மாதிரியான முடிபில்லாத தொடர்கள் காணப்படுகின்றன.

புருஷர்களுடைய முடியைக் 'குழல்' என்று 11-ஆம் போர்ச்சருக்கம், 23-ஆம் செய்யுளிற் கூறியுள்ளார். குழல் என்பது பெண்களின் கூந்தலையே குறிக்கும்.

ஒரு நூலை வாசிக்கத் தொடங்குகின்றவர்கள், இப்புத்தகத்துட் கூறியவாறு தலைப்புக்களை அமைத்துக்கொண்டு நூலைப் படிக்கத் தொடங்கி, அப்பொழுது அப்பொழுது குறிப்பெடுத்துப் பழகுதல்

* நிவாத. 118; புட்பயாத். 29, 30.

ஆராய்ச்சி முறையைப் பெறுவதற்குத் தக்கசாதன மாகும். தலைப்புக்களிற் சில நூலின் இயல்புக்கு ஏற்ப மாறுபடுதலுமுண்டு. இப் புத்தகத்தை ஒருமுறை இருமுறை படித்துவிட்டு வில்லிபாரதத்தைப் பயிலத் தொடங்குவோர் தக்க பயனடைவர் என்பது என் முழு நம்பிக்கையாகும்.



முற்றிற்று.